# இந்தக் கோடையில் வேர்க்குரு எங்கு தாக்கும்?

நெற்றி

கழுத்து

தோள்

கைகள்

முதுகு

வேர்க்குரு எங்கு தாக்கினாலும், அதை முறியடிக்க உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரில் மட்டுமே நிரூபணம் பெற்ற மருந்துக் கலவை அடங்கியுள்ளது. அது மூன்று வழிகளில் செயலாற்றுகிறது.

- வியர்வை உறிஞ்சுகிறது; சருமத் துவாரங்கள் அடைபடுவதைத் தடுக்கிறது.
- பாக்டீரியா கிருமிகள் பெருகுவதைத் தடுக்கிறது.
- சுகமும் குளுமையும் தந்து, உடனடி நிவாரணம் அளிக்கிறது.

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரைக் குளித்தவுடனும், படுக்கும் முன்பும் உடம்பின்மீது தாராளமாகத் தூவுங்கள். உடனடியாக வேர்க்குருவைத் தடுக்கும் மருந்து கலந்த வேர்க்குரு பவுடர் இது ஒன்றுதான்!




சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

## ஜான்ஸன்ஸ்* ப்ரிக்லி ஹீட் பவுடர் மட்டுமே உடல் எரிச்சலை நிறுத்துகிறது; அரிப்பிலிருந்து நிவாரணமளிக்கிறது உடனடியாக.

Johnson & Johnson*

OBM-4317 TM

# நம் குழந்தைக்கு வழி வகுப்போம்!



## கரூர் வைஸ்யா பாங்க்

அளிக்கும்

# திருமகள் திருமண திட்டத்தில்

பங்கு கொள்வீர்!



**எதிர்காலத் திருமணங்களை எளிதாக்கும் பயனுள்ள பல திட்டங்கள்**

ரூ. 3000/- மட்டும் செலுத்தி இருபது ஆண்டுகள் கழித்து ரூ. 22,750/- பெற்றுத் தங்கள் செல்வத் திருமகள் திருமணத்தை சீரும் சிறப்புமாக நடத்துங்கள். இத்தொகையை ஓர் ஆண்டுக்குள் தவணைகளிலும் செலுத்தலாம்.

இதே திட்டத்தின் கீழ் ரூ. 600/- அல்லது அதன் பெருக்குத்துகையாக எவ்வளவாயினும் செலுத்தலாம்.

இத்திட்டத்தின் கீழ் மாதா மாதம் ரூ. 50/- விதம் செலுத்தியும் பலவகையில் பயனடையலாம்.

## கரூர் வைஸ்யா பாங்க் லிட்.

பதிவு அலுவலகம்
கரூர் - 639001



பி. ஜி. சாண்யன்
சேர்மன்

# கல்கி

ராக்ஷஸ சித்திரை. 7

ஏப்ரல் 20, 1975

★

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே





# 50,000 ரூபாய் மதிப்புள்ள பரிசுகள் பெறுங்கள்

## பாரியின் 'ஏற்றதருணம் எது' போட்டியில்

சொருங்கள்

**2** முதற் பரிசுகள் — ரூ 10,000 மதிப்புள்ள நகைகள், உங்கள் விருப்பம் போல்

**2** இரண்டாவது பரிசுகள் — ரூ 5,000 மதிப்புள்ள நவீன குக்கிங் ரேஞ்ச் அல்லது ரெப்ரிஜிரேட்டர்

50 ஆறுதல் பரிசுகள் — ரூ 400 மதிப்புள்ள காஞ்சீபுரம் பட்டுச்சேலைகள்




பாரியின் 'ஸ்வீட் பாங்க்'
தரமான பாரி மிட்டாய்கள் அடங்கியது.
450 கிராம்
ரூ 12 தான்!




முழு விவரங் களடங்கிய நுழைவுத்தாட் கள் உங்கள் அருகாமையிலுள்ள பாரி விற்பனையாளரிடம் பெறுங்கள்.

**முந்துங்கள்! போட்டி முடியும் நாள் ஜூன் 15, 1975**

பாரீஸ் கன்பெக்ஷனரி லிமிடெட், சென்னை




SAA/PRS/1665

கல்கி

மலர் 34

இதழ் 38

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயெனக் கும்பிடடி பாப்பா — பாரதியார்

# அதற்குப் பலகோடி, இதற்குச் சில கோடி!

**வ**றட்சி நிவாரணப் பணிகளுக்கு மாநிலங்களுக்குத் தேவை ஏற்படும்போது மத்திய அரசு நிதி ஒதுக்குகிறது. மாநிலங்கள் நிறைவேற்றும் திட்டங்களுக்காக ஒதுக்கப்படும் தொகையில் முன் பணமாகவே இவை கருதப்படுகின்றன. இது தவறு; வறட்சி நிவாரணப் பணிக்குத் தனியே மத்திய அரசு மானியம் வழங்க வேண்டும் என்கிறார் நமது முதல்வர்.

மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது இதில் நியாயம் இருப் பதுபோல் தோன்றும். ஆனால் ஆழ்ந்து பார்த்தால் முதல்வரின் கூற்று மாநிலத்தின் நலனுக்கோ தேச நலனுக்கோ ஏற்றதல்ல என்று புரியும்.

திட்டத்துக்கு ஒதுக்கும் தொகையில் முன்பணமாகக் கருதப் படும்போதே வீண் விரயம் நிறைய ஆகிறது. தில்லுமுல்லுகளுக்கும் குறைவில்லை. மானியமாகவே வழங்கிவிட்டால் கேட்கவே வேண் டாம். பெரும் பகுதிப் பணம் அரோகராதான்.

அதுபோக வேறு ஒரு முக்கிய அம்சமும் கவனிக்கப்பட வேண் டும். வறட்சி நிவாரணப் பணியில் இரு அம்சங்கள் உண்டு. பசியால் வாடித் துடிக்கும் மக்களுக்கு உடனடி நிவாரணம் அளிப்பது ஒன்று. மற்றது வறட்சிப் பிரதேசங்களில் உள்ள மக்களுக்கு வேலை வாய்ப் புக்கள் அளித்து அவர்கள் மூலம் பல மராமத்து வேலைகளை நிறை வேற்றிக் கொள்வது. இவை வறட்சிப் பகுதிகளுக்கும் மாநிலத் துக்கும் நிரந்தரப் பயன் விளைவிக்கும் திட்டங்களாக அமையும். இந்த இரண்டாவது அம்சத்துக்கு ஒதுக்கப்படும் தொகையை மத்திய அரசு முன்பணமாகவே கருதுவதில் தவறே கிடையாது.

மானியமாக அல்லாமல் முன்பணமாகக் கருதி மத்திய அரசு வழங்கும்போதே, வறட்சி நிவாரணப் பணிக்குப் பல்வேறு மானிலங் களில் செலவிடப்படும் ஏராளமான தொகைகள் பணப் புழக்கத்தை அதிகரித்து, பண வீக்கத்தை மிகுதியாக்கி, விலைவாசிகளை உயர்த்தி நாடெங்கும் மக்களுக்குப் பரவலான சிரமத்தை விளைவிக்கிறது என்று நிபுணர்கள் கூறுகின்றனர். அவ்வாறிருக்க, திட்டத்துக்குப் பல கோடிகள், வறட்சி நிவாரணத்துக்கு மேலும் சில கோடிகள் என்று செலவழித்தால் — பணப் புழக்கத்தை அதிகரித்துக்கொண்டே போனால் — மக்கள் துயர் குறைவதற்குப் பதில் மேன்மேலும் அதிகரிக்கவே செய்யும்.

பொருளாதாரப் பிரச்னைகளில் உணர்ச்சிக்கு இடமளிக்காமல் இருப்பதே தேசத்துக்கு நல்லது.

# வழிப்பறியா, லெவி முறையா?

**நா**ச்சியார்கோயில் சீனிவாசப் பெருமாள் ஆலயத்தில் அதி காரிகள் புகுந்து செய்த அக்கிரமங்கள் ஆஸ்திக மக்கள் பலரது இதயங்களை வெகுவாகப் புண்படுத்தியுள்ளன.

இந்தக் கோயிலில் லெவி நெல் வசூலிப்பதற்காக அதிகாரிகள் நடந்து கொண்ட விதம் வேறு கிராமப்புறங்களில் விவசாயப் பெருங் குடி மக்கள் பலரிடம் அதிகாரிகள் நடந்துகொண்ட விதத்துக்குச் சிறிதும் மாறுபட்டதல்ல. கோயில் விஷயம் பிரபலமான அளவுக்குக் குடும்பங்கள் பல பட்ட அவதி பிரபலமாகவில்லை, அவ்வளவுதான்.

திருவள்ளுவர் சிலை தயாரித்துத் தில்லிக்கு அனுப்பும் தி. மு. க. மந்திரிகள், லெவி முறை அமல்படுத்தப்படும் விதம்,

**வேலொடு நின்றான் இடு என்றது போலுங்
கோலொடு நின்றான் இரவு**

என்ற ரீதியில் அமைந்திருப்பதை எண்ணிப் பார்க்கட்டும். பகல் கொள்ளை அடிப்பது போலவா அதிகாரிகள் நடந்துகொள்வது?

தங்கத் தமிழ்நாட்டில் நடக்கும் பித்தலை ஆட்சியில் துன்பம் தாங்காமல் குடிமக்கள் வடிக்கிற கண்ணீர் வீண் போகாது.

மன்னர்கள் ஒழிக!
வாழ்க, சிகானுக் மன்னர்!

ருஷ்யா

சிகானுக் மன்னர் மறுபடியும் கம்போடியா வில்.....



# திசை திருப்ப வேண்டாம்!

இரு வாரங்களுக்கு முன்னால் "முதல்வருக்கு ஒரு கடிதம்" என்ற தலைப்பில் நாம் எழுதிய ஒரு தலையங்கத்துக்குக் கழக ஏட்டில் முதல்வர் பதில் கூறியுள்ளார்.

வேலூர் மருத்துவ மனையில் வேலைநீக்கம் செய்யப்பட்டவர் இவர், வேலைநிறுத்தம் காரணமாக வேலைநீக்கம் செய்யப்பட்டவர் பதினைந்து பேர் என்று கணக்கை நமக்கு நேராக்கிக் காண்பித்ததற்கு அதிகமாக, மேற்படி தலையங்கத்தில் எழுப்பப்பட்டுள்ள தார் மிகப் பிரச்னைகளுக்கு முதல்வர் பதில் ஏதும் கூறவில்லை, கூறவும் முடியாது.

முதல்வரின் கட்டுரையில் கவனத்துக்குரிய நாலு வரிகள் இவை: "கஷ்டப்படும் மக்களைக் காப்பாற்ற — அப்படியே சற்றுக் கடுமையான முயற்சி எடுத்துக்கொண்டு — வசதியுள்ளவரிடம் வறட்சி நிதி வாங்குவதில் தவறுதான் என்ன?"

மத்திய அரசின் உதவி வேண்டாம் என்று ஒதுக்கிவிட்டு வறட்சிநிதி வசூலிக்கச் சொல்லி அதிகாரிகளையும் முடுக்கி விட்டால் பொதுவாக மக்களுக்கு எவ்வளவு சிரமம் என்ற நம் கேள்விக்குப் பதில் இது.

"அப்படியே சற்றுக் கடுமையான முயற்சி எடுத்துக்கொண்டு" என்ற வார்த்தைகளைக் கவனியுங்கள்.

முதல்வர் கொஞ்சம் கடுமையான முயற்சி என்று சொல்லிவிட்டால் போதாதா? அதிகாரிகள் கசக்கிப் பிழிய ஆரம்பித்துவிடமாட்டார்களா? யோசிக்க வேண்டும். இத்தகைய விஷயங்களில் தமிழக மக்களுக்கு நிரம்ப முன் அனுபவம் உண்டு இந்த ஆட்சியில்.

முதல்வர் தமது பதிலுரையில் மாநில சுயாட்சிக் கோரிக்கைக்கு ராஜாஜியைத் துணைக்கு அழைக்கிறார். இவரது மாநில சுயாட்சிக் கோரிக்கையை அப்படியே ஏற்று ராஜாஜி பேஷ் பேஷ் என்று முதுகில் தட்டிக் கொடுத்துவிட்டது போல் எழுதுகிறார்.

ராஜாஜி இன்று இருந்தால் இன்றையச் சூழலில் என்ன சொல்வார், என்ன செய்வார் என்று நாம் எண்ணிப் பார்ப்பதே அசட்டுத்தனம். ஆனால் கடந்த காலத்தில் என்ன சொன்னார் என்று பார்ப்பதில் தவறில்லை.

அவரது கருத்துக்கும் இன்றைய தி. மு. க. வின் மாநில சுயாட்சிக் கோரிக்கைக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் உண்டு.

'ராஜமன்னார் கமிட்டி சிபாரிசுகள் பல ஏற்பதற்குரியனவே. ஆனால் அந்த அறிக்கையைத் தி. மு. க. அரசே நிராகரித்துவிட்டது. அவற்றை விட மிக அதிகமான அதிகாரங்களை மாநில சுயாட்சி என்ற பெயரில் கேட்கிறது. இவை ஏற்கத் தகுந்தவையல்ல' என்று அறிஞர் சந்தானம் சுயராஜ்யாவில் பலமுறை எழுதியிருக்கிறார். கல்கியிலும் அவரது கருத்துக்கள் பிரசுரமாகியுள்ளன.

ராஜமன்னார் கமிட்டி சிபாரிசுகளை நிராகரித்து மாநில சுயாட்சிக் கோரிக்கையைத் தி. மு. க. அரசு சட்டசபையில் நிறைவேற்றியது ராஜாஜி காலமான பிறகு. அவ்வாறிருக்க ராஜாஜி இதற்கு ஆதரவும் ஆசியும் வழங்கியுள்ளது போல் முதல்வர் பேசுவதும் எழுதுவதும் விசித்திரம்.

## அ. தி. மு. க. வெற்றி!

அ.தி.மு.க.வுக்கும் முக்கியமாக ஆலடி அருணாவுக்கும் பெரிய வெற்றி.

1971 அரிசி பேர ஊழலில் திரு ப. உ. சண்முகம் சம்பந்தப்பட்டிருந்தாரா இல்லையா என்பதை ஆராய நீதி விசாரணைக்குத் தி. மு. க. அரசு ஏற்பாடு செய்திருப்பதைத்தான் குறிப்பிடுகிறோம்.

அ. தி. மு. க. சட்டசபை அங்கத்தினர்களின் விடாமுயற்சிதான் இதைச் சாத்தியமாக்கியது. அதிலும் ஆலடி அருணா சண்டமாருதமாக இயங்கியிருக்கிறார்.

முதல்வர் இந்த ஏற்பாட்டை ஆரம்பத்திலேயே தாமே செய்து கடந்த பல மாதங்களாக இருந்துவரும் வாதப் பிரதி வாதங்களுக்கு இடமில்லாமல் பண்ணியிருக்கலாம்.

இதுவரை வராத அபகீர்த்தி தி. மு. க. வுக்கு இனி புதுசாக என்ன வந்துவிடப் போகிறது என்ற அளவில் நீதி விசாரணைக்கு இப்போது முதல்வர் ஒத்துக் கொண்டாரா அல்லது திரு சண்முகம் பேரில் குற்றமில்லை

ராஜாஜி சிந்தனை

### சமநீதி வேண்டும்!

தேசியக் கொள்கைகள் அனைத்துக்கும் அடிப்படை நீதி. எது நல்லது என்பது பற்றிய தனிநபரின் அபிப்பிராயங்கள் பல சமயங்களில் தவறிவிடலாம். ஆனால் அநீதி என்பது பளிச்சென்று தெரியும். அதைத் தவிர்ப்பது கடமை. பெரும்பான்மை பலத்தைக் கொண்டு ஹிந்தியைக் கட்டாயமாகப் பாரதம் முழுவதும் ஆட்சிமொழியாக்குவதும் மாநிலங்களுக்கிடையே செய்தித் தொடர்புக்குப் பயன்படுத்துவதும் ஹிந்தியைத் தாய்மொழியாகக் கொள்ளாதவர்களுக்கு இழைக்கப்படும் பெரிய அநீதிகளாகும். அவர்களுக்கு இம்மொழி புதிது, கற்பது கடினம், அதில் ஹிந்தியைத் தாய்மொழியாகக் கொண்டவர்களுக்கு இணையான பாண்டித்தியம் பெறுவது முடியாத காரியம்.

ஐந்து தலைமுறைகளாக ஆங்கிலம் பாரதத்தை ஐக்கியப்படுத்தியும் ஆட்சி மொழியாகவும் இருந்து வந்திருக்கிறது என்பதைப் புறக்கணிக்க முடியாது. ஆங்கிலத்தையே தொடர்ந்து நீடிக்கச் செய்வது எல்லாருக்கும் சமநீதி கிடைக்கப் பண்ணியதாகும்.

விங்க், அக்டோபர் 5, 1958.

என்று நிரூபணமானால் தி. மு. க. வேகமாக இழந்து வரும் கௌரவத்தை ஓரளவேனும் காக்கலாம் என்ற எண்ணத்தில் ஒப்புக்கொண்டாரா என்பதை நாம் அறியோம். விசாரணையின் முடிவுதான் இதை விளக்கும்.

காலம் கடந்ததாயினும் விசாரணைக்கு ஒப்புக் கொண்டவரை மகிழ்ச்சி. தி.மு.க. அரசுக்கும் எதிர்க் கட்சிகளுக்கும் மட்டுமின்றி திரு சண்முகத்துக்கும் பொதுமக்களுக்கும் கூட ஏற்ற சரியான முடிவு.

## பாலை ஊட்டுங்கள், விஷமல்ல!

**பீ**காரில், சட்டசபை இந்திரா காங்கிரஸ் தலைவராக மிச்ரா ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டாராம். சொல்கிறார்கள். கஃபூரும் அதற்கு முன் பலரும்கூட இப்படித்தான் 'ஏகமனதாக'த் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இந்திரா அம்மையாரும் காங்கிரஸ் மேலிடமும் தமது விருப்பு வெறுப்புக்கு ஏற்ப ஒருவரைப் பதவியில் வைப்பதும் உடனே ஆளும் கட்சியினர் பிளவுபட்டு முதல்வருக்குக் குழி பறிப்பதும் வழக்கமான கதைகளாகிவிட்டன.

கஃபூர் கூட முன்பே விட்டால் போதும் என்று ஓட்டம் பிடித்திருப்பார். ஆனால் அது ஜே. பி.யிடம் தோல்வி அடைந்ததாகி விடும் என்ற கருத்தில் இந்திரா காங்கிரஸ் மேலிடம் அவரைப் பதவி நாற்காலியில் இதுகாறும் அழுத்திப் பிடித்து உட்கார வைத்திருந்தது.

கஃபூரை நீக்கி மிச்ராவை முதல்வராக்கியதால் பீகாரில் நிலைமை மாறிவிடப் போவதில்லை. விஷத்தை ஊட்டிக் குழந்தையை வளர்க்க முடியுமானால் ஜனநாயகத்துக்குப் பொருந்தாத இதுபோன்ற காரியங்களால் நமது குடியரசும் தழைக்கும்.

இவரைப் பற்றி

## ஜி. விசுவநாதன்

**வ**ந்தவாசித் தொகுதிப் பாராளுமன்ற உறுப்பினர் திரு ஜி. விசுவநாதன் தமிழ்நாட்டுப் பிரதிநிதிகளுள் வயதில் இளையவர். லோக் சபையில் தி.மு.க. துணைத் தலைவராக இருந்தார். நாஞ்சில் கி. மனோகரன் கட்சியிலிருந்து வெளியேறிய பிறகு, தி. மு. க.வின் சார்பில் திரு விசுவநாதனின் குரல்தான் லோக் சபையில் அடிக்கடி ஒலித்து வந்தது.

"இவரது கைகள் துளிக் கூடக் கறைபடாதவை என்பதைப் பற்றி யாருக்குமே ஐயம் இராது. இந்த ஒரு விஷயத்தை நான் அழுத்தம் திருத்தமாகக் கூறுவேன்" என்கிறார் டாக்டர் ஹண்டே.

இனிய சுபாவமுள்ளவர். அனைவரிடமும் கலகலப்பாகப் பேசிப் பழகுவார். குறிப்பாகத் தொண்டர்கள் மத்தியில் மிகவும் அன்புடன் பழகுவாராம். பல பஞ்சாயத்து உறுப்பினர்கள் இவருடன் கட்சியிலிருந்து வெளியேறியதே இதற்குச் சான்று.

விசுவநாதன் முப்பத்தாறு வயது இளைஞர். எம். ஏ. பி.எல். பட்டம் பெற்றவர். சொந்த ஊர் குடியாத்தம். குழந்தைகள்: மூன்று.

திரு விசுவநாதன் தி. மு. க.விலிருந்து வெளியேறியது குறித்து ஆளும் (தி.மு.க.) கட்சியைச் சார்ந்த சட்டமன்ற உறுப்பினர் ஒருவரது கருத்து:

"யாராவது கட்சியிலிருந்து வெளியேறி அ.தி.மு.க.வில் சேர்ந்தால், கட்சித் தலைவர்கள் வெளியேறியவரைக் கண்டனம் செய்து பழித்துரைப்பது வழக்கம். குறிப்பிட்ட பெரும் புள்ளி கட்சியிலிருந்து வெளியேறியதால் ஏற்பட்ட ஏமாற்றத்தையும் வேதனையையும் மறைக்க வேண்டி அவரைத் தாக்கிப் பேசுவதுண்டு. ஆனால் விசுவநாதன் விவகாரத்தில் அப்படி ஏதும் தாக்கிப் பேசவும் முடியவில்லை. ஏனெனில் தாக்கிப் பேசும்படி அவரிடம் குறை ஏதுமில்லை!"

## லான் நோல்

**1970**ல் நிகழ்ந்த அரசியல் சதியின் விளைவாகக் கம்போடியாவை ஆண்டுவந்த நரோதம் சிஹானூக் பதவியிலிருந்து விரட்டப்பட்டார். அவ்வமயம் ஆட்சிப் பொறுப்பேற்றவர் மார்ஷல் லான் நோல். 1971ல் இவருக்கு வாத நோய் கண்டு உடலின் ஒரு பக்கம் சற்றுப் பாதிக்கப்பட்டது. 61 வயதானவர்.

லான், நாட்டுத் தலைவரான பிறகும் எளிய உணவையே (அரிசியும் மீனும்) புசிக்கிறார். வீட்டிலுள்ள இருபது புத்தர் சிலைகளின் எதிரில் தினமும் இரண்டு வேளை தவறாமல் தொழுவாராம். நாட்டின் இன்றைய பரிதாப நிலைமை குறித்துக் குறி சொல்லுபவர்களையும், சோதிடர்களையும் அழைத்து விசாரிப்பாராம். தமக்கு உள்நாட்டிலோ அயல் நாடுகளிலோ சொத்து சேர்த்துக் கொள்ளாதவர்.

வயலின் இசையில் மூழ்கியிருப்பது, இவருக்குப் பிடித்தமான பொழுதுபோக்கு. வாரத்துக்கு மூன்று நாட்கள் குடும்பத்துடன் சினிமா பார்ப்பார். அரசியல் விவகாரங்களை விவாதிக்கும்பொழுது லான் பேசுவது குறைவாகவே இருக்கும். எவ்வித உணர்ச்சியையும் வெளியிடாமல் பிறர் பேசுவதைச் செவிமடுப்பது இவரது இயல்பு.

தாம் இறப்பதற்கு முன் இந்தியாவுக்கு வந்து இங்குள்ள புத்த விஹாரங்களைக் கண்டு ஆறுதல் பெறவேண்டுமென்பது இவரது ஆசைக் கனவு! ஐந்து ஆண்டுகள் கம்போடியாவின் அதிபராக விளங்கிய மார்ஷல் லான் இன்று பதவி இழந்து பாலித் தீவுக்கு வந்து சேர்ந்துள்ளார்.

– 'பாணன்'

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய ஸ்வாமிகள்

# முருகப் பெருமான் ⑥

**''ஸ்**வாமி'' என்ற பெயர் ஸுப்ரமண்யத்துக்கே உரியது என்பதற்கு ஆதாரமாக இன்னொரு விஷயமும் தோன்றுகிறது.

திருப்பதியை ஸுப்ரமண்யரோடு சம்பந்தப்படுத்திப் பேசுவது உங்களுக்குத் தெரிந்திருக்கும். வேங்கடரமண ஸ்வாமியே ஸுப்ரமண்யர் தான் என்று நினைக்கிறவர்கள் உண்டு. என் அபிப்பிராயத்தில் வேங்கடரமணஸ்வாமி சகல தெய்வங்களாகவும் இருக்கிற பரமாத்மாவாக இருக்கிறார். அவரே பெருமாள். அவரே பரமேச்வரன் — அதனால்தான் அங்கே பில்வ அர்ச்சனை நடக்கிறது. அவரே அம்பாள் — இன்றைக்கும் சுக்ரவாரத்தில்தான் அவருக்கு அபிஷேகம்; புடவையைத்தான் உடுத்துகிறார்கள். எல்லாம் அவரே என்பது என் அபிப்பிராயம். அவரைச் ஸுப்ரம்மண்யராகச் சொல்பவர்கள் கூறும் காரணம்— அவர் மலைமேல் இருக்கிறதுதான். மலைமேல் பொதுவாக ஸுப்ரமணியர்தான் கோயில் கொண்டிருக்கிற வழக்கம் இருக்கிறது என்கிறார்கள். ஹிந்திக்காரர்கள் அவரை என்னவென்று சொல்கிறார்கள்? 'வேங்கடரமணர்' என்று சொல்வதில்லை. 'பாலாஜி' 'பாலாஜி' என்றே சொல்வார்கள். பாலன், குமரன் என்றால் சிவசக்தியின் செல்லக் குழந்தையான ஸுப்ரமண்ய ஸ்வாமியைத்தான் குறிப்பிடும். 'குமார தாரை' என்றே திருப்பதியில் ஒரு தீர்த்தம் இருக்கிறது. இதோடு சேர்த்து அங்குள்ள திருக்குளத்தைப் பார்த்தால் 'ஸ்வாமியே குமாரன்'தான் என்பதற்கு இன்னொரு சான்று கிடைக்கிற மாதிரி இருக்கிறது. திருப்பதியில் திருக்குளத்துக்கு ''**ஸ்வாமி** புஷ்கரணி'' என்றே பெயர் இருக்கிறது.

சகல லோகத்தையும் — ஜீவர்களையும் ஜடத்தையும் — தன் சொத்தாக (ஸ்வம்)க் கொண்டிருக்கிறவர்தான் 'ஸ்வாமி'. அந்தப் பெயர் ஏன் ஸுப்ரமண்யருக்கு விசேஷமாக வந்தது? அத்தனை பெருமை அவருக்கு ஏன் என்று பார்ப்போம்.

மேகத்தில் மின்னல் பளிச்சிடுகிறது. க்ஷண காலம்தான். அதற்குள் அது மகா ஜோதியை, மகா சக்தியைக் கொட்டிவிடுகிறது. எத்தனையோ 'பவர் ஹவுஸ்'களில் 'ஜெனரேட்' செய்ய முடியாத அளவுக்கு மின்சாரத்தைப் பாய்ச்சி விடுகிறது. இத்தனை சக்தி இப்போதுதான் மின்னலாகத் **தோன்றினாலும்** இதற்கு முன் அது இல்லாமல் இல்லை. இல்லாதது எப்படித் தோன்ற முடியும்? ஸயன்டிஸ்ட்கள் மின்சாரம் எப்போதும் எங்கேயும் நிறைந்திருக்கிறது என்கிறார்கள். ஆனால் அப்போது அது தெரிவதில்லை. பின் எப்போது தெரிகிறது? நீராவி மேகங்களாக மாறித் திரிகிறபோது, ஒன்றாக இருக்கிற மின்சாரம் சில பகுதிகளில் வல அம்சமாகவும் (பாஸிடிவ்), சிலவற்றில் இட அம்சமாகவும் (நெகடிவ்) பிரிந்து நிறைகிறது. பிற்பாடு மழை சமயத்தில் மேகங்களில் ஒரு விதமான நெரிசல், குமுறல் உண்டாகிறது. வல அம்சப் (Positively charged) பகுதிகளும் இட அம்சப் பகுதிகளும் நெருங்குகிறபோது இந்த அம்சங்கள் ஒன்றையொன்று சரேலென்று ஆகர்ஷித்துக் கொள்கின்றன. இப்படி அவை தாவிக் கலக்கும்போது எங்கும் நிறைந்திருக்கிற மின்சாரம், நமக்குத் தெரிகிற மாதிரி இத்தனை சக்தியுடன் மின்னலாக வெளிப்பட்டுத் தெரிகிறது. எங்கும் **ஒன்றாக** உள்ளபோது இருப்பதே தெரியாமலிருந்த மின்சாரம் **இரண்டாகப் பிரிந்து பிறகு மறுபடியும் ஒன்றாகச் சேருகிறபோது** பெரிதாக ஜொலிக்கிறது; ஒலிக்கிறது இடியாக; மின் சக்தியை வாரிக் கொட்டுகிறது.

இது ஜட சக்தியான மின்சாரம். இந்த ஜட சக்திக்கு ஆதாரம், இதைப் பிறப்பித்த சித் சக்தி — ஞான சக்தி — அறிவு சக்தி. தன் சக்தியை அறிந்து கொள்ளாமலே எங்கேயும் பரம்பொருளாக அது முதலில் இருக்கிறது. அப்புறம் 'பாஸிடிவ்', 'நெகடிவ்' ஆகப் பிரிகிறது. அதைத்தான் சிவன், சக்தி என்கிறோம். தமிழில் 'வலது' 'இடது' என்று மின்சாரத்துக்குச் சொல்கிறோமே, அதுதான் ரொம்பப் பொருத்தம். ஏனென்றால் ஈசுவரன் வலப்பக்கமும், அம்பாள் இடப் பக்கமும் இருப்பதுதான் அர்த்தநாரீசுவரக் கோலம். (அம்பாளுக்குப் பதில் அதே இடத்தில் — அதாவது இடப்புறத்தில் — விஷ்ணு இருந்துவிட்டால் அதுவே சங்கர நாராயணர். இரண்டாகப் பிரிந்தால் போதாது. மேகங்கள் உண்டானாலும் போதாது. மின்னலாக வாழ்விக்கிற சக்தி ஏற்பட வேண்டும். பிரம்மம் தன்னை அறிந்து, சிவசக்தியாகிப் பிரபஞ்சத்தை உண்டுபண்ணி விட்டால் போதாது. பிரபஞ்சத்துக்கு எந்நாளும் அநுக்கிரகம் பண்ணிக் கொண்டிருப்பதற்காக ஒரு மின்னல் சக்தி பிறக்க வேண்டும். இதற்காகத்தான் இரண்டாகப் பிரிந்த வல அம்ச சிவனும், இட அம்ச சக்தியும் மறுபடியும் ஒன்றாகச் சேர்ந்து, மின்னல் போல் சக்தி வேலாயுதத்தைப் பிடித்திருக்கிற ஸுப்ரம்மண்ய ஜோதியை ஆவிர்ப்பிக்கச் செய்தார்கள். பிரம்மத்தன்மையானது லோகாநுக்கிரகத்துக்கு என்றே ஒரு மூர்த்தியாகிறபோது 'ஸுப்ரம்மண்யம்' ஆகச் சிறப்புப் பெறுகிறது. ''ஸ்வாமி'' என்ற 'டைட்டில்' கிடைக்கும்படியான பெருமையைப் பெறுகிறது.

இப்படி ஜோதி உண்டாவதற்காகவே மூலமான சித் சக்தி பிரிந்து, சேர்ந்தது. பிரிந்தது, அப்புறம் பெரிய ஆகர்ஷண வேகத்தோடு சேருவதற்காகத்தான். சேர்ந்தது, இப்படி லோகங்களுக்கெல்லாம் கிருபை செய்கிற மகா சக்திமானாக ஒரு ஜோதிக் குமாரன் உண்டாவதற்குத்தான். (தொடரும்)



# இந்தர் தனுஷ்

## வெள்ளை எள்ளெண்ணெய் (தில் ஆயில்)

- அக்மார்க் முத்திரைப் பெற்றது
- நூற்றுக்கு நூறு சுத்தமானது
- அவ்வப்பொழுது தயார் செய்யப்படுவது
- இயற்கையான மணமும் நிறமும் கொண்டது



Manufactured by:

**BOHRA MILLS BALLABGARH (HARYANA)**

*Largest and Oldest Til Oil producers in Northern India*

Depot: **Behind Shardha Nand Market, Delhi - 6**

Trade Enquires: **Delhi Phone: 279669**

# நெருக்கடி நாயகம்




நமது அரசியல் சாஸனத்தில் இரு வித அரசாங்கங்களுக்கு விதிகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஒன்று சாதாரண காலங்களில் நிலவ வேண்டிய ஜனநாயகம். இந்த அரசாங்கத்தில் பார்லிமெண்டும், ராஜ்ய சட்ட சபைகளும் மத்திய மாநில மந்திரி சபைகளும் தத்தம் அதிகாரங்களுக்கு உட்பட்டுச் செயல் புரிய வேண்டும். மத்திய பார்லிமெண்டுக்கு ஓர் ஏகபோகப் பட்டியல், மாநில சட்டசபைக்கு ஓர் ஏகபோக பட்டியல், மத்திய, மாநில சட்டசபைகள் இரண்டுக்கும் பொதுவான ஒரு பட்டியல் என்று எல்லா அரசியல் விவகாரங்களும் மூன்று பட்டியல்களில் பிரிக்கப்பட்டிருக்கின்றன. பார்லிமெண்டின் பட்டியலில் அடங்கியுள்ள இனங்களைப் பற்றி மாநில சட்டசபைகள் எவ்வித சட்டமும் செய்யக் கூடாது. அவ்வாறே மாநில சட்டசபைப் பட்டியலில் உள்ள இனங்களில் பார்லிமெண்ட் சட்டம் செய்யக் கூடாது. பொதுப் பட்டியலிலுள்ள இனங்களைப் பற்றி இரண்டும் சட்டமியற்றலாம், ஆனால் பார்லிமெண்டின் சட்டங்களே ஓங்கி நிற்பன, மாநில சட்டசபைகளின் சட்டங்கள் பார்லிமெண்டின் சட்டங்களுக்கு முரண்பாடாக இருந்தால், அவை செல்லுபடியாகமாட்டா. இந்த அதிகாரப் பங்கீட்டைப் பற்றி மத்திய மாநில அரசாங்கங்களுக்குள் தகராறு ஏற்பட்டால் சுப்ரீம் கோர்ட்டு அதைத் தீர்க்க அதிகாரமுள்ளது.

மந்திரி சபைகளும், அதிகாரிகளும் அரசியல் சாஸனத்துக்கும், பார்லிமெண்டு, மாநில சட்டசபைகளின் சட்டங்களுக்கும் உட்பட்டு நிர்வாகம் செய்ய வேண்டும். மீறினால் நியாயாலயங்கள் மூலம் தடுக்கப்பட்டு, தண்டிக்கப்படுவதற்கு விதிகள் செய்யப்பட்டிருக்கின்றன.

சாஸனத்தில் பதினெட்டாம் பாகத்தில் மேற்கூறிய ஜனநாயகத்திலிருந்து பல அம்சங்களில் மாறுபட்ட அரசாங்கத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதை நெருக்கடி நாயகம் என்று கூறத் தகும். நெருக்கடி காலங்களிலேயே இம்முறையைக் கையாள வேண்டும், நெருக்கடி தீர்ந்ததும் பூர்ண ஜனநாயகத்தை மீண்டும் அமுலாக்க வேண்டுமென்பது இந்தப் பாகத்தின் நோக்கம். துரதிர்ஷ்டவசமாக நெருக்கடி என்ற பதத்துக்குப் போதிய கட்டுப்பாடில்லாமலும், நெருக்கடி பிரகடனம் செய்வதற்கும் அதை முடிப்பதற்கும் கால வரைகள் தெளிவாக வரையப்படாமல் இருப்பதாலும் நெருக்கடி நாயகத்தை அநியாயமாக நீடித்து, துஷ்பிரயோகம் செய்வதற்கு இடமேற்பட்டு விட்டது. அரசியல் சாஸனத்தை இயற்றிய நிர்ணய சபை அங்கத்தினர்களில் பெரும்பாலோர் சுதந்திரப் போரில் கலந்து கொண்டவர்கள். ஜனநாயகத்தை ஒரு மதமாகக் கொண்டவர்கள். தாங்கள் இயற்றும் ஜனநாயக அரசியலில் ஆளும் தலைவர்கள் அனாவசியமாக நெருக்கடிநாயகத்தைக் கையாளுவார்கள் என்று கனவிலும் எண்ணவில்லை. அதிகாரம் என்பது ஒரு பெரும் போதை வஸ்து, எளிதில் மதிமயக்கத்தை உண்டாக்கக் கூடியது, அதற்குத் தெளிவான மீறக்கூடாத எல்லைகளும், கட்டுப்பாடுகளும் தேவை என்பதைச் சரியாகக் கவனிக்கவில்லை. அதன் தீய பலன்களை நாம் இப்போது அனுபவிக்கிறோம்.

நெருக்கடி நாயகத்துக்கு மூன்று பாகங்கள் உண்டு. முதலாவது, அகில இந்திய நெருக்கடி. இதனால் ஏற்படும் மாறுதல்கள் அரசியல் சாஸனத்தின் 352, 353, 354, 355, 358, 359 விதிகளில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. சுருங்கக் கூறின், இவ்வித நெருக்கடிப் பிரகடனம் அமுலில் இருக்கும் காலத்தில், மாநில சட்டசபைகளுக்கும், மந்திரி சபைகளுக்கும் தனிப்பட்ட ஏகபோக உரி




க. சந்தானம்

மைகள் இல்லை. பார்லிமெண்ட் மாநில சட்ட சபைகளின் உரிமைகளை இஷ்டம்போல் தன்னிடம் எடுத்துக் கொள்ளலாம். மத்திய மந்திரி சபை எந்த விஷயத்திலும் மாநில மந்திரி சபைகளுக்கு உத்தரவிடலாம். பிரஜைகளின் மூல சுதந்திரங்களை நெருக்கடி காலத்தில் நிறுத்தி வைக்கலாம். அவற்றை அமுல் செய்யக் கோர்ட்டுகளுக்குள்ள அதிகாரங்களையும் தாற்காலிகமாக எடுத்துவிடலாம். பார்லிமெண்டு தனது ஆயுளைத் தேர்தலின்றி ஐந்து ஆண்டு எல்லைக்குமேல் ஒவ்வொரு வருஷமாக நீடிக்கலாம்.

நெருக்கடி நாயகம் ஜனநாயகத்துக்கும், எதேச்சாதிகாரத்துக்கும் நடுவிலுள்ள ஒரு நாயகமாகும். அது ஜனநாயகத்துக்குத் திரும்பலாம். எதேச்சாதிகாரத்துக்கும் முன்னேறலாம்.

இவ்வித அகில இந்திய நெருக்கடி நாயகம் 1962லிருந்து 1969 வரையிலும் அமுலிலிருந்தது. 1971லிருந்து இன்னும் அமுலிலிருக்கிறது. ஆராய்ந்து பார்த்தால் 1962ல் சில மாதங்களுக்குச் சீன ஆக்கிரமிப்புக்காகவும், 1964ல் சில மாதங்களுக்கு பாகிஸ்தான் ஆக்கிரமிப்புக்காகவும் அதை அமுல் செய்வது நியாயமாக இருந்திருக்கும். 1965-1969 வருஷங்களில், நீடித்தது ஜனநாயகத்துக்கு இழைத்த பெரிய தீமையாகும். 1971 நெருக்கடிப் பிரகடனத்துக்கு அவசியமே இல்லை. பாகிஸ்தானும் பங்களா தேசமும் மோதியபோது, பாரதத்தின் பாதுகாப்புக்கோ அமைதிக்கோ எவ்வித அபாயமும் நேர்ந்திருக்காது. அதை நெருக்கடி காலம் என்று ஏற்றுக் கொண்டாலும் 1971 முடிவில் நெருக்கடியை முடித்து ஜனநாயகத்துக்குத் திரும்ப வேண்டியது பொறுப்புள்ள தலைவர்களின் கடமையாக இருந்தது. அவ்வாறு செய்யாமல் நெருக்கடி நாயகத்தை நீடித்து, ஜனநாயகத்தைக் குலைத்திருப்பது நமது வருங்கால சந்ததிகளுக்குப் பெரும் தீங்கு இழைப்பதாகும்.

எவ்வித கெட்ட பழக்கமும் காலத்தால் சகஜமாகிறது. நெருக்கடி நாயகத்தை நீடிக்கும் பிரதம மந்திரியும், மத்திய மந்திரிகளும் இதர காங்கிரஸ் தலைவர்களும் தாங்கள்தாம் ஜனநாயகத்தின் காப்பாளிகள் என்றும், அதை எதிர்த்துப் போராடும் ஜயப்பிரகாசர் போன்றவர்கள் எதேச்சாதிகாரத்தை ஏற்படுத்த முயலுகின்றவர் என்றும் வாதாடுவது கேலிக்கூத்தன்றோ?

நெருக்கடி நீடித்தாலும் ஜனநாயக முறைகள் பெரும்பாலும் அமுலில் இருக்கின்றன என்று வாதாடுகிறார்கள். இது ஓரளவு உண்மையே. ஆனால் தங்கள் பிறப்புரிமையான ஜனநாயகத்துக்கும் ஆளும் கட்சியின் தயவால் நடைபெறும் போலி ஜனநாயகத்துக்கும் உள்ள வித்தியாசம் மலைக்கும் மடுவுக்கும் உள்ளது போன்றது.

நெருக்கடி நாயகம், கடத்தல்காரர்களை மடக்குவதற்குப் பயன்படவில்லையா என்று வினவலாம். கடத்தலைத் தடுக்கவும், கடத்தல்காரர்களைத் தண்டிக்கவும், அவர்கள் அநியாயமாகச் சேகரித்திருக்கும் சொத்தைப் பறிமுதல் செய்யவும் கடுமையான சட்டங்கள் இயற்றப் பார்லிமெண்டுக்குப் பூரண அதிகாரமுண்டு. அவ்வித சட்டங்கள் இல்லாமல், நெருக்கடியின் கீழ் கடத்தல்காரர்களைச் சிறையில் வைத்திருப்பதும், அவர்களுடைய சொத்துக்களை ஜப்தி செய்திருப்பதும் பொது நலத்துக்காகச் செய்யப்பட்டிருந்தாலும் முறைகேடான காரியங்கள். கொலைகாரனாக இருந்தாலும் இந்தியப் பிரஜை சட்டப் பிரகாரமே நடத்தப்பட வேண்டும் என்பது ஜனநாயகத்தின் மூலாதாரக் கொள்கை. நேராக எளிதில் ஜனநாயக முறையில் செய்யக் கூடிய காரியத்துக்கு நெருக்கடி நாயகம் தேவை என்று கூறுவோரின் மூளைக் கோளாறுகளைப் பற்றி என்ன சொல்வது?

நெருக்கடி நாயகத்தின் இரண்டாவது பாகம் மாநிலங்களில் அரசியல் கட்சிகளின் தகராறுகளைக் காரணம் கூறி அவற்றின் ஜனநாயக சட்டசபைகளைக் கலைத்தும், ஸ்தம்பிக்கச் செய்தும், மந்திரிசபைகளை நீக்கி ராஷ்டிரபதியின் ஆட்சியைச் சுமத்துவதற்கு இடமளிக்கிறது. உள்நாட்டுப் பலாத்காரப் புரட்சியால் அரசாங்கம் நடைபெறச் சாத்தியமில்லாத நிலைமையில் இது நியாயமாகும். ஆனால் ஆளும் கட்சியின் பலத்தைப் பெருக்குவதற்கும், எதிர்க் கட்சிகளின் செல்வாக்கைக் குறைப்பதற்குமே இவ்விதிகள் இப்பொழுது பயன்படுகின்றன. இதை எதிர்த்து மொரார்ஜி தேசாய் கடுமையான உண்ணாவிரதம் மேற்கொண்டிருக்கிறார். அவர் முடிவில் ஒரே ஒரு குறை கூறலாம். குஜராத் சட்டசபையைக் கலைத்தபொழுதே அதற்குத் தேர்தல் நடத்த வேண்டும் என்று சத்தியாக்கிரகம் தொடங்கியிருக்க வேண்டும். ஆனால் உள்ளம் பொறுக்க முடியாமல் கொதித்து எழும்போதுதான் சத்தியாக்கிரகம் சாத்தியமாகும். மத்திய அரசாங்கம் உடனே குஜராத் தேர்தலுக்கு உத்தரவிட்டு இந்தச் சத்தியாக்கிரகத்தைத் தடுக்குமென்று நம்புகிறேன். இல்லாவிடில் நாடெங்கும் மக்கள் இதுவரையில் காணாத பெரும் கிளர்ச்சி செய்ய வேண்டும்.

நெருக்கடி நாயகத்தின் மூன்றும் பாகம் 359, 360 விதிகளில் கண்டிருக்கும் பொருளாதார நெருக்கடியைப் பற்றியது. இதைப் பிரயோகிப்பதற்கு இதுவரையில் அவசியம் ஏற்படவில்லை. சாதாரண ஜனநாயகத்திலேயே மத்திய அரசாங்கத்துக்குப் போதிய அதிகாரங்கள் இருக்கின்றன.

பாரத மக்கள் முன்னிலையில் இருக்கும் அரசியல் பிரச்னைகளில் ஜனநாயகமா, நெருக்கடி நாயகமா என்பதே முதன்மையானது. நெருக்கடி நாயகத்தைச் சென்ற நான்கு ஆண்டுகளாக நீடித்த அரசியல் கட்சிக்கு எதிராக வாக்களிப்பது ஜனநாயகத்தை விரும்பும் இந்தியனின் கடமையாகும். தேர்தலுக்கு முன் நெருக்கடிப் பிரகடனத்தை ரத்து செய்தாலும், இனி இவ்விதம் நெருக்கடி நாயகம் ஏற்படாது என்று உறுதியளிக்காத எக்கட்சிக்கும் அதன் அபேட்சகர்களுக்கும் ஆதரவு அளிக்கலாகாது.

# “ஸ்ரீ யோகாம்பிகை அதிஷ்டானம்”

# ஸ்ரீ யோக கருமாரி அம்மன் அதிஷ்டானம்

திருவேற்காடு :: சென்னை - 60( 077







புதுக்கோட்டை புவனேஸ்வரி பீடாதிபதி **ஸ்ரீமத் சாந்தானந்த சரஸ்வத்யவதூத ஸ்வாமிகள்** ஸ்ரீ சக்ரபூர்ண மஹாமேருவை மேற்படி அதிஷ்டானத்துக்கு அளித்து மஹாப்பிரதிஷ்டை செய்தனர்.

---

## உலக நலனுக்காக 3-வது ஆண்டு சதசண்டி மஹாஹோமம்

*15-5-75* ஆரம்பித்து *24-5-75* விசாக பௌர்ணமி அன்று மதியம் 12 மணிக்கு மஹாபூர்ண ஆஹுதி நடைபெறுகின்றது. அன்று மாலை 6 மணிக்கு ஸ்ரீ மேருவுக்கு நவாபரண பூஜை நடைபெறுகின்றது. தினந்தோறும் சண்டி ஹோமத்திற்கு இடையில் கீழ்க்கண்ட ஹோமங்கள் நடைபெறும்

16-5-75 ஸ்வர்ண ஆகர்ஷண கணபதி ஹோமம். 17-5-75 நவக்ரஹ ஹோமம்.
18-5-75 ஸ்ரீ புவனேஸ்வரி ஹோமம். 19-5-75 அன்னபூரணி ஹோமம்.
20-5-75 ஸ்ரீ ஸ்கந்த ஹோமம். 21-5-75 அதர்வண பத்ரகாளி ஹோமம்.
22-5-75 ஸ்ரீ சந்தான கோபால ஹோமம். 23-5-75 ஜெயதுர்கா ஹோமம்.
24-5-75 கோ பூஜை. கஜ பூஜை. கன்னிகா பூஜை. சுவாசினி பூஜை. வடுக பூஜை. வசோத்தாரை ஸ்ரீ சதசண்டி ஹோம பூர்ண ஆஹுதி. ஸ்ரீ யோக கருமாரி அம்மனுக்கு மஹா அபிஷேகம். 64 உபசாரங்கள். மஹா தீப ஆராதனை.

ஒரு ஹோமத்திற்கு கைங்கர்யம் செய்பவர் ரூ. 150/-ம் வெள்ளி டாலர் வேண்டுபவர் ரூ. 15/-ம் மேற்படி விலாசத்திற்கு அனுப்பி வைக்கவும்.

தலைவர்: அருள்மொழி அரசு திருமுருக கிருபானந்த வாரியார்

உப தலைவர்: அம்பிகா அடிமை ஸ்ரீ என். சங்கரன், திருவேற்காடு

ஸ்ரீ M.V. சுவாமிநாதன், B.Com., *Secretary* ஸ்ரீ S. தியாகராஜன், B.Sc., *Jt. Secretary* ஸ்ரீ M. விஸ்வநாதன் *Treasurer*

ஹோமக் கமிட்டி

ஸ்ரீமதி K. S. ஜானகி ஸ்வாமிநாதன் *Secretary*

ஸ்ரீ R. V. ரமணி, B.E., *Treasurer*

*Telephone. 83735*





## 38. நீலகிரி

**காணும் காட்சியைக் காணச் செய்வது கலை**

சுந்தா

அபூர்வமாய்த் தமிழில் வெளியாகியுள்ள நல்ல வாழ்க்கை வரலாறுகளில் ஒன்று, கி. சந்திரசேகரன், தம்முடைய தந்தையார் வி. கிருஷ்ணசாமி ஐயரைப் பற்றி எழுதியுள்ளது. அதை ஒரு சிறந்த நூலென்று விரிவானதொரு மதிப்புரையில் கல்கி வரவேற்றார்:

''பல நண்பர்கள் ஆங்கிலத்தில்தான் எழுத வேண்டும்'' என்று சொல்லியும் இந் நூலைத் துணிந்து தமிழில் எழுதியதினால் ஸ்ரீ கி. சந்திரசேகரன், தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் ஓர் அரும் பெரும் தொண்டு செய்திருக்கிறார். தமிழ் நாட்டுப் பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகளை விவரமாகவும் ஆதாரங்களுடனும் எழுதுவதற்கு வழிகாட்டியிருக்கிறார். அவருக்கு நமது மனப்பூர்வமான நன்றி.

காலஞ்சென்ற ஸ்ரீ வி. கிருஷ்ணசாமி ஐயர் அவர்களுக்கு ஞாபகச் சின்னங்களாக மயிலையில் ஸம்ஸ்கிருத கலாசாலை, வேங்கடரமண ஆயுர்வேத வைத்தியசாலை ஆகியவை விளங்குகின்றன. இந்தச் சிறந்த வாழ்க்கைச் சரித்திர நூல் அவருக்கு மூன்றாவது ஞாபகச் சின்னமாக விளங்கும் என்று நம்புகிறோம்.

இதை எழுதுகையில் கல்கி, பாரதியாருக்கு எட்டயபுரத்தில் நினைவுச் சின்னம் எழுப்பும் பணியில் ஈடுபட்டிருந்தார். (இந்த மதிப்புரை வெளியான 26—8—45 கல்கி இதழுக்கு அடுத்த இதழில் பாரதி மண்டபப் பிளான் பிரசுரமாயிற்று.)

இதே மதிப்புரையிலிருந்து இன்னொரு பகுதி:

ஸ்ரீ வி. கிருஷ்ணசாமி ஐயரின் வாழ்க்கையில் ஒரு சம்பவம் தமிழ் மக்கள் மிகவும் முக்கியமாகக் கருதக்கூடியதாகும். பாரதியார் தீவிரவாதியாகவும் ஸ்ரீ வி. கிருஷ்ணசாமி ஐயர் மிதவாதியாகவும் இருந்த போதிலும், பாரதியாரின் தேசியப் பாடல்களைப் பெரிதும் ரஸித்துப் பாராட்டி அவற்றை முதன் முதலில் அச்சிட உதவி செய்தவர் ஸ்ரீகிருஷ்ணசாமி ஐயர். அந்த ரஸமான வரலாற்றை இந்நூலின் 23ம் அத்தியாயத்தில் காணலாம்.

''பாரதியாரை — எதிர்க் கட்சியில் இருப்பவரை — தீவிர மிதவாதியான ஒருவர் கௌரவித்தார் என்றால், அது அவருடைய பெயருக்கும் புத்தி விசேஷத்துக்கும் அன்றும் இன்றும் அளவிலாப் பெருமை தருவதன்றோ?'' என்று ஆசிரியர் கேட்கிறார்.

★ ''ஆங்கிலத்தில் எழுதுமாறு பல நண்பர்கள் கூறியும் இந் நூலைத் துணிந்து தமிழில் எழுதியதால் கி. சந்திரசேகரன் தமிழ்த்தாய்க்குப் பெரும் தொண்டு செய்திருக்கிறார்.''




★ ருத்ரானந்தரை மனத்தில் கொண்டே....



★ ''.... கல்கி படைத்த மகானந்தர். (படம்: கல்பனு)

''புத்தி விசேஷம்'' என்பதைக் காட்டிலும் ''இதய விசேஷம்'' என்று குறிப்பிட்டிருந்தால் அதிகப் பொருத்தமாய் இருந்திருக்கும் என்று நாம் கருதுகிறோம்.



கிருஷ்ணசாமி ஐயர் செய்த உதவி எல்வித விசேஷமாய் இருந்தாலும், அதன் மூலம் பாலப் பருவத்தில் கல்கி அடைந்த பலனை அபூர்வமான ஞான விசேஷம் என்றுதான் சொல்ல வேண்டும். அந்த உதவி பற்றிய வாக்கியங்களைப் படிக்கையிலும், மேலேயுள்ள வரிகளை எழுதுகையிலும், கல்கியின் நினைவு முப்பத்தைந்து ஆண்டுகள் பின்





★ ''என் ஸ்நேகிதி ஆனந்தியை, ஏன் அழைத்து வரவில்லை?' என்று கேட்டது.''

★ ''நான் எழுதும் கடிதங்களை நீ ஒழித்துவிடாமல் ஜாக்கிரதையாய் வைத்திரு. உனக்கு வயதான பிறகு படித்துப் பார்க்கலாம் அல்லவா?''

★ ''இம்மாத ஆரம்பத்தில் சில தினங்கள் நான் உதகமண்டலத்தில் தங்கி யிருந்தேன்....''

நோக்கி ஓடி யிருக்கும். பாரதியின் முதல் நூலைப் பத்தாவது வயதில் தாம் படித்துப் பரவசம் அடைந்ததையும், அப்போதே தமது பக்திக்கு உரிய கவிஞருக்கு மானசிகமாய்ப் புகழ் மண்டபம் எழுப்பி விட்டதையும் அவர் எண்ணிப் பார்த்திருப்பார்.

தமது மதிப்புரையின் அடுத்த பகுதியில் கல்கி, பல கடிதங்கள் நூலில் இடம் பெற்றிருப்பதைக் கேலியாகச் சுட்டிக் காட்டி இருக்கிறார்:

இந்தப் புத்தகத்தைப் படிக்கும் போது, அந்த நாளில் பல பிரமுகர்கள் கடிதம் எழுதுவதிலேயே தங்கள் காலத்தைப் போக்கியிருப்பார்கள் என்று தோன்றுகிறது. ஒரு வேளை தபால் சார்ஜ் அந்த நாளில் ரொம்பக் குறைவாயிருந்ததின் பலன் போலும்.

அநேக கடிதங்களிலிருந்து பல பகுதிகளை மொழிபெயர்த்து இந்நூலில் ஆங்காங்கே ஆசிரியர் சேர்த்திருக்கிறார்.

என்ன இப்படிச் சொல்லிவிட்டார் கல்கி? வாழ்க்கை வரலாற்று நூல் ஒன்றில் கடிதங்கள் இணைந்திருப்பது ஒரு குறையா என்ன? உண்மையில் அவை ஒரு நிறைவை அல்லவோ தருகின்றன?

கல்கி விரும்பாவிட்டாலும், அவருடைய இந்த வரலாற்றிலும் கணிசமாய்க் கடிதங்கள் இடம் பெறுகின்றன. இந்த அத்தியாயத்திலேயே ஐந்து கடிதங்கள் — அவரே எழுதிய கடிதங்கள். இவற்றிலும் முதலாவது கி. சந்திரசேகரனுக்கே எழுதியது:

சென்னை 31—5—1935

அருமை என்னும் துர்க் குணம் என்னிடம் இடையாது என்று நானே பெருமைப்பட்டுக் கொள்வதுண்டு. ஆனால் கோடைக்கானலில் இவ்வருஷம் கூடியுள்ள ஸ்நேகிதர்கள் எல்லாரும் சேர்ந்து, எனக்கு அருமையை உண்

டாக்குவது என்று கங்கணம் கட்டியிருப்பதாகத் தோன்றுகிறது. தாங்களும் ஸ்ரீமான்கள் அப்புஸ்வாமி அய்யர், ஸ்வாமி அய்யங்கார் இவர்களும் எழுதியிருப்பதைப் படிக்கும்போது, வேனிற் காலத்தைக் கோடைக்கானலில் கழிக்காத ஜன்மம் என்ன ஜன்மம் என்று வாழ்க்கையிலேயே வெறுப்பு உண்டாகிறது.

இம்மாத ஆரம்பத்தில் சில தினங்கள் நான் உதகமண்டலத்தில் கழித்தேன். அங்கு தங்களைப் போலவேதான் மலைப் பிரதேசங்களில் நடப்பதிலும், இயற்கைக் காட்சிகளைப் பார்ப்பதிலும் பொழுது சென்றது. ஒரு நாள் டைகர் ஹில் என்னும் குன்றின் உச்சிக்குச் சென்றிருந்தோம். அங்கே புலி ஒன்றையும் பார்க்கவில்லை. ஆனால் அபூர்வமான ஒரு குகையைப் பார்த்தோம். அந்தக் குகைக்குள் என்ன இருந்ததென்று நினைக்கிறீர்கள்? ரொம்பவும் ஆச்சரியகரமான இருட்டு அதில் குடிகொண்டிருந்தது. ''அடாடா! இவ்வளவு அற்புதமான இருட்டைப் பிரம்மதேவன் இந்தக் குகைக்குள் கொண்டு வைத்திருக்கிறானே! எங்கேயாவது வெட்டவெளிச்சமான இடத்தில் வைத்திருந்தால் எல்லோரும் பார்த்துச் சந்தோஷப்படுவார்களே!'' என்று எண்ணிப் பரிதாபப்பட்டேன்.

அப்புறம் அந்தக் குகைக்கு மேலுள்ள செங்குத்தான பாறையில் ஏறி உட்கார்ந்து கொண்டோம். அங்கிருந்து பார்த்தால் வெகுதூரத்துக்கு வெகு தூரம் அழகான இயற்கைக் காட்சிகள் தென்படுகின்றன. அவைகளைப் பார்ப்பதில் ஈடுபட்ட நாங்கள் அப்படியே லயமடைந்து உட்கார்ந்துவிட்டோம். ஒருவருக்கும் எழுந்திருக்க மனம் வரவில்லை. ''கிளம்புங்கள், கிளம்புங்கள்'' என்று ஒருவரையொருவர் சொல்லிக் கொண்டிருந்தோமே தவிர ஒருவரும் எழுந்திருக்கவில்லை. கடைசியில் நான், ''உண்மையைச் சொல்லி விடுகிறேன், அப்பா! எனக்குக் காலை வலிக்கிறது. அதனால்தான் உட்கார்ந்திருக்கிறேன்'' என்றேன். பிறகு எல்லாரும் நிஜம் சொல்லி விட்டார்கள்; அவரவர்களும் காலை வலிப்பதால்தான் உட்கார்ந்திருப்பதாக!....

நீலகிரியில் இரண்டாம் தடவையாகக் கல்கி, பாலிய நண்பர் ருத்ரானந்தருடன் இராமகிருஷ்ண மடத்தில் தங்கி இருந்துவிட்டுச் சென்னைக்குத் திரும்பிய பிறகு எழுதிய கடிதம் இது. அங்கே தங்கியிருக்கையிலேயே நாலு நீண்ட கடிதங்களைத் தமது இரண்டு வயது மகள் ஆனந்திக்கு எழுதினார். படிக்கத் தெரியாத குழந்தைக்கு ஏன் எழுதினார்? குழந்தைக்கு எழுதுகிற பாவனையில் மனைவிக்கு எழுதினார் என்று வைத்துக்கொள்ளலாம். ஆனால், அது மட்டும் காரணம் அல்ல என்பதை, முதல் கடிதத்தின் தொடக்கம் விளக்குகிறது.

இனிமேல் உன்னை விட்டு விட்டு நான் எப்போது வெளியூருக்குப் போனாலும் உனக்குக் கடிதம் எழுதுவது என்று தீர்மானித்திருக்கிறேன். நான் எழுதும் கடிதங்களை நீ கிழித்துவிடாமல் ஜாக்கிரதையாய் வைத்திருக்க வேண்டும். உனக்கு வயதானபிறகு வாசித்துப் பார்த்தால் சுவாரசியமாய் இருக்கும் அல்லவா?

அப்படியே ஆனந்தி ஜாக்கிரதையாய் வைத்திருந்தாள்.

அந்த ஊட்டிக் கடிதங்களில் ஒரு சிறுமிக்குச் சொல்லும் எளிய பாணியும், நேர் நடையும், அழகான வர்ணனைகளும் விதவிதமாய் ஊடாடும் உணர்ச்சிகளும் அமைந்துள்ளன.

அதே முதல் கடிதத்தில் பிரயாண வர்ணனை:

ரயில் மலை மேல் ஏற ஆரம்பித்தது. இரண்டு பக்கமும் நிறைய வளர்ந்திருந்த காட்டுச் செடிகளில் சின்னச் சின்ன பூக்கள் ஏராளமாய்ப் புஷ்பித்திருந்தன. ஒரு பூ, உன்னுடைய அம்மா காதில் போட்டுக் கொண்டிருக்கும் தோட்டைப் போல் இருந்தது. இந்தப் பூ லட்சம் லட்சமாய்ப் பூத்திருந்தது. சில பூக்கள் இரத்தினம்போல் சிவப்பாகவும், சில பட்டை தீர்ந்த கற்கள் போல் சிவப்பாகவும், இன்னும் சில ஊதா நிறமாயும் இருந்தன.

ஓர் இடத்தில் ''கிரீச்'' என்ற சத்தம் கேட்டது. அங்கே என்னவென்று பார்த்தேன். காட்டுச் செடிகளுக்கு மத்தியில் ஒரு குரங்கு இருந்தது. அது என்னைப் பார்த்து, ''என் சிநேகிதி ஆனந்தியை ஏன் அழைத்துக் கொண்டு வரவில்லை?'' என்று கேட்டது. ''ஆனந்தி சின்னக் குழந்தைதானே? அவளுக்கு ஊட்டியின் குளிர் இந்த வருஷம் பொறுக்காது. அடுத்த வருஷம் பெரியவளாய்ப் போய்விடுவாள். அப்போது முடிந்தால் அழைத்து வருகிறேன்'' என்றேன்.

சில இடங்களில் பட்டுப் பூச்சிகள் ஏராளமாய்ப் பறந்து கொண்டிருந்தன. அவற்றின் சிறகுகள் விதம் விதமான வர்ணங்களில் இருந்தன. இருபது வர்ணங்கள் நான் எண்ணினேன். ''ஆனந்தி இப்போது இங்கே இருந்தால், அந்தப் பட்டுப் பூச்சிகளைப் பிடிக்க வேண்டும் என்று பிடிவாதம் செய்வாள்'' என்று எண்ணிக் கொண்டேன்.

இன்னும் சில இடங்களில் மலை மேலிருந்து தண்ணீர் சளசளவென்றும் சொட சொடவென்றும் கொட்டிக் கொண்டிருந்தது. அங்கெல்லாம் ரயில் நிற்கக் கூடாதோ, நின்றால் சற்று இறங்கி அந்தத் தண்ணீரைக் கையால் அளைந்து விட்டுப் போகலாமே என்று எனக்குத் தோன்றிற்று. நீயாயிருந்தால், அங்கிருந்து வரவேமாட்டேன் என்று சொல்வாய்.

(2-5-'35)

இரண்டாவது கடிதத்தில், அவர் தங்கியிருந்த ஆசிரமத்தை யொட்டிய கோயிலின் வர்ணனை:

# சிந்தால் வாக்குறுதி...

*மேனியெழிலுக்கு முழுப் பராமரிப்பு

*புதுமை குன்றாத நறுமணம்

*துர்நாற்றத்திலிருந்து சிறந்த பாதுகாப்பு




...சிந்தால் மட்டுமே நிறைவேற்றக்கூடியது.

ஆசிரமத்தின் மேற்குப் பாகத்தில் ஒரு சின்னக் கோயில் இருக்கிறது. அதன் மண்டபம் நம் ஊர்க் கோயில்களின் கர்ப்பக்கிருஹ மண்டபம் போல் ஸ்தூபி முதலியவைகளுடன் அமைந்திருக்கிறது. கோயிலில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் பெரிய படம் வைத்து, அதற்குத் தினம் இரண்டு வேளையும் பூஜை, நைவேத்தியம், ஹாரத்தி எல்லாம் செய்கிறார்கள்.

நம் வீட்டில் என்னுடைய ஆபீஸ் அறையில் ஒரு பெரியவருடைய சின்னப் படம் மாட்டியிருக்கிறதல்லவா ? தாடி மீசையுடன் பிரமை பிடித்தவர் போல் காணப்படும் அந்தத் தாத்தாதான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர். அவருடைய பெயரால், அவருடைய சிஷ்யர்களால்தான் இந்த மடம் ஸ்தாபிக்கப்பட்டு நடத்தப்படுகிறது. அவருக்கு என்ன இவ்வளவு பெருமை என்று கேட்டால், அவர் ஸ்வாமியை நேருக்கு நேர் கண்டவர்.....

(4-5-'35)

## ஸ்ரீ ராம லீலா மாநாடு

20-4-75 ஞாயிற்றுக்கிழமை சென்னை, தியாகராய நகரில் 'ஸ்ரீ ராம லீலா மாநாடு' ஒன்று பெரிய அளவில் நடத்துவது என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

மாநாட்டோடு மட்டும் நின்றுவிடாமல் ஆக்கப் பணியில் ஈடுபடவும் சென்னையில் ஓர் 'ஹிந்து கேந்திரம்' (Hindu centre) ஏற்படுத்தவும் உத்தேசிக்கப்பட்டுள்ளது. ஹிந்துக்களுடைய கலை, கலாச்சாரம், சமயம், ஆலய வழிபாடு, மற்ற அனைத்துத் துறையின் தகவல் நிலையமாகவும், தொடர்பு கேந்திரமாகவும், மற்ற பாகத்திலிருந்து வரும் ஹிந்து யாத்ரிகர்களுக்கு வழி காட்டும் நிலையமாகவும் இது அமையும்.

இந்த அற்புதமான ஆக்கப் பணியில் ஒவ்வொரு ஹிந்துவும் பங்கேற்றுக் கொள்ளும்படி அழைக்கிறோம்.

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

ஹிந்து ஆலயப் பாதுகாப்புக் கமிட்டி, மயிலை ரங்கநாத முதலித்தெரு, சென்னை-600017

கல்கி அங்கே தங்கியிருக்கையில், ஜார்ஜ் மன்னர் மகுடம் சூடி இருபத்தைந்து ஆண்டுகள் நிறைந்ததைத் தடபுடலாகக் கொண்டாடினார்கள். அந்தக் கொண்டாட்டத்தினிடையே, தேசபக்தர் ஒருவரின் உணர்ச்சி எப்படி இருந்திருக்கும் என்பதை, மூன்றாவது கடிதம் வெளிப்படுத்துகிறது:

ஐந்தாம் ஜார்ஜ் என்பவர் இங்கிலீஷ்காரர்களுடைய ராஜா. நம்முடைய இந்தியா தேசம் இப்போது இங்கிலீஷ்காரர்களின் ஆட்சியில் இருப்பதால், நமக்கும் ஐந்தாம் ஜார்ஜ்தான் இப்போது ராஜா. இந்த ராஜா பட்டத்துக்கு வந்து இப்போது இருபத்தைந்து வருஷம் ஆகிறது. இதுதான் வெள்ளி ஜூபிலி. இந்த இருபத்தைந்து வருஷத்தில் இங்கிலீஷ்காரர்கள் அநேக நன்மைகளையும் பெருமைகளையும் அடைந்திருக்கிறார்கள். ஆகையால் அவர்கள் இந்த வருஷம் வெள்ளி ஜூபிலி கொண்டாடுகிறார்கள். அவர்கள் கொண்டாடுவதற்கு நியாயம் இருக்கிறது.

இந்த இருபத்தைந்து வருஷத்தில், இந்தியாவில் உள்ள நாம் எவ்வித நன்மையும் அடையவில்லை. அதற்குப் பதிலாக அநேக துன்பங்களை அடைந்திருக்கிறோம் ; அகௌரவங்களுக்கு உள்ளாகியிருக்கிறோம். ஆகையால், நமக்கு இந்தக் கொண்டாட்டத்தில் எவ்வித உற்சாகமும் கிடையாது. ஆனாலும் இங்கிலீஷ்காரர்களே இந்தத் தேசத்தில் இப்போது சர்க்கார் நடத்துவதால், அவர்களும் அவர்களுடைய தயவை எதிர்பார்க்கும் இந்தியர்களும், நம் தேசத்திலும் வெள்ளிவிழாக் கொண்டாடுகிறார்கள்.

இந்த ஊரிலும் நேற்று மேற்படி கொண்டாட்டம் நடந்தது. வேடிக்கை பார்ப்பதற்காக நேற்று இரவு ஏழு மணிக்கு, ஆசிரமத்துக்குப் பக்கத்தில் உள்ள 'எல்க் ஹில்' என்னும் குன்றின் உச்சிக்குப் போனோம். அங்கிருந்து பார்த்தால், கீழே ஊட்டிப் பட்டணம் நன்றாகத் தெரியும். சாதாரணமாகவே ஏராளமான விளக்குகள் தெரியுமாதலால், இந்தக் காட்சி பார்ப்பதற்கு மிகவும் அழகாயிருக்கும். நேற்று இராத்திரி வெள்ளி ஜூபிலியை உத்தேசித்து அநேகக் கட்டடங்களுக்கு விசேஷ தீபாலங்காரம் செய்திருந்தார்கள். எங்கே பார்த்தாலும் தீப வரிசைகள் கண்ணைப் பறித்தன. என்னுடன் வந்த ஒரு ஸ்வாமியார் பின்வருமாறு சொன்னார் : ''ஆகாசத்து நட்சத்திரங்கள் வானவெளியில் அலைந்து அலைந்து அலுத்துப் போய், இளைப்பாறுவதற்குக் கீழே வந்து உட்கார்ந்திருப்பது போல் காண்கிறது !''

எல்லாவற்றைக் காட்டிலும், வாண வேடிக்கையைப் பார்த்தபோதுதான் எனக்கு உன்னுடைய ஞாபகம் வந்தது. நீ இங்கே இருந்தால், ஒவ்வொரு தடவை ஆகாயத்தில் வாணம் வெடித்து வர்ணப் பொறிகள் உதிரும்போதும், ''மத்தாப்பூ பார்த்தியா ?'' என்று கூச்சல் போட்டுக் குதித்திருப்பாயல்லவா ?''.....

(7-5-'35)

கொண்டாட்டம் முடிந்து, மீண்டும் பழைய அமைதி நிலவுகிறது. ஊருக்கும் வீட்டுக்கும் திரும்பி, குழந்தையைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை, கடைசிக் கடிதத்தில் தொனிக்கிறது.

நான் உட்கார்ந்து எழுதுகிற அறைக்கு எதிரே ஒரு செடியின் கிளையில் அடிக்கடி இரண்டு குருவிகள் வந்து உட்காருகின்றன. அந்தக் குருவிகளைப் பார்த்தால், அங்கே நம்மாத்து ஆபீஸ் அறையில் அடிக்கடி வந்து உட்காருகிற குருவிகளைப் போலவே தோன்றுகிறது. ஒருவேளை அவைதாம் இங்கு வந்

இருக்கின்றனவோ என்று நினைத்து. ஒரு நாள், ''குருவி! குருவி! மாம்பலத்திலிருந்து எப்போது வந்தாய்? ஆனந்தி சௌக்கியமாயிருக்கிறாளா?'' என்று கேட்டேன். அந்தக் குருவிகள் என்னைப் பரிகாசம் பண்ணுவது போல் கோணலாய்ப் பார்த்துவிட்டு ஓடிவிட்டன......

சீக்கிரம் புறப்பட்டு வந்து உன்னைப் பார்க்க வேண்டும் என்று எனக்கு ஆவலாயிருக்கிறது. ஆனால் ஞாயிற்றுக்கிழமை போகலாம் என்று இங்குள்ள சாமியார்கள் சொல்கிறார்கள்..... ஆனந்தி அப்பாவைப் பார்க்க ஆவலாய் இருப்பாளே என்று சாமியார்களுக்குத் தெரியாதல்லவா?....

(11-5-'35)

இந்தக் கடிதங்களுக்கு உரிய ஆனந்தி, பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு கல்கத்தாவிலிருந்து பம்பாய்க்கு ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்த போது, வனப் பகுதி ஒன்றில் ஒரே விதமான சிவப்புப் பூ மரங்கள் மண்டிக் கிடந்ததைக் கண்டாள். கண்ட மகிழ்ச்சியில், ஓடும் ரயிலிலிருந்தே தந்தைக்கு ஒரு கடிதம் எழுதினாள். ''இவைகளைப் பார்த்தபோது, நான் குழந்தையாய் இருந்தபோது உதகமண்டலத்திலிருந்து நீங்கள் எழுதிய கடிதங்கள் நினைவுக்கு வந்தன'' என்று அதில் குறிப்பிட்டாள். அதற்கு ருசுவாக அவருடைய வர்ணனை வாக்கியங்கள் சிலவற்றை நினைவிலிருந்து எழுதி அனுப்பினாள்.

இவ்வாறு மகளின் மனத்தில் பசுமையாய்ப் பதித்த நீலகிரிக் காட்சிகளைப் பின்னர் கல்கி தமது வாசகர்கள் மனத்திலும், சில கதைகள் நாவல்கள் மூலம் நிலையாகப் பதித்தார் — குறிப்பாக, ''பவானி பி.ஏ. பி.எல்.'' என்ற சிறு கதையிலும், ''மகுடபதி'' என்ற நாவலிலும்.

எடுத்துக்காட்டாக முதலில், பவானி கதையிலிருந்து மூன்று வர்ணனைகளைப் பார்ப்போம்:

1. ''வெயிலின் அருமை குளிரில் தெரியும்'' என்ற பழமொழியின் உண்மையை நீலகிரியில் நன்கு தெரிந்துகொள்ளலாம். நான் போயிருந்த அன்று மாலை நாலுமணிக்கு நானும் புரொபஸரும் பங்களாவின் வாசல்புறத்தில் இளம் வெயிலில் காய்ந்து கொண்டு உட்கார்ந்திருந்தோம். அங்கிருந்து பார்த்தால், சுற்றிலும் வெகுதூரத்துக்கு வரிசை வரிசையான மலைத் தொடர்களும், பசுமையான காடுகளும், பள்ளத்தாக்குகளும், மலை வீழருவிகளுமே காட்சியளித்தன. யூகலிப்டஸ் மரங்களின் கிளைகளில் ஜிலு ஜிலுவென்று இளங்காற்று வீசியபோது ஏற்பட்ட ''ஹோய்'' என்ற மனோகரமான சப்தத்தைத் தவிர வேறு சப்தமே கிடையாது.....

2. நீலகிரியில் அவ்வருஷம் வழக்கத்துக்கு முன்னதாகவே மேற்கத்தி மழை தொடங்கிவிடக் கூடும் என்று அநுபவம் உள்ளவர்கள் சொன்னார்கள். காற்றின் வேகம் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டு வந்தது. மரங்களும் செடி கொடிகளும் அசைந்தாடும்போது, வரப் போகும் பெரு மழையை நினைத்து அவை நடுங்குவது போல் காணப்பட்டது. மேற்குத் திக்கில் இருண்ட மேகங்கள் சூழத் தொடங்கின. திக்குத் திகந்தங்கள் எல்லாம் நடுங்கும் படி இடி முழக்கங்கள் கேட்டன. வெயிற் காலத்தில் இரை தேடி மலைக்கு வந்த பட்சிகள் கூட்டம் கூட்டமாகக் கீழ்த் திசையை நோக்கிச் செல்லலாயின. சுகவாசத்துக்காக மலைக்கு வந்திருந்த சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் அவசர அவசரமாக மூட்டை கட்டினார்கள்....

3. அன்றிரவு மலையில் பிரமாதமான காற்று அடித்தது. மரங்கள் தடார் படார் என்று முறிந்து விழுந்தன. பங்களாவின் மீது காற்று வேகமாய் மோதிய போது, அது அஸ்திவாரத்திலிருந்து ஆடுவது போல் தோன்றியது. அந்தப் பங்களாவில் வசித்த ஒவ்வொருவர் உள்ளத்திலும் அதைவிடப் பெரிய சண்டமாருதம் அடித்துக் கொண்டிருந்தது.

இந்த இயற்கைக் காட்சிகளும் சலனங்களும் வெறும் அலங்காரங்கள் அல்ல என்பது கதையைப் படித்தவர்களுக்குத் தெரியும். கதையின் நிகழ்ச்சிகளுடனும் கதை மாந்தரின் உணர்ச்சிகளுடனும் நெருங்கிப் பிணைந்தவை இவை.

இனி, ''மகுடபதி'' நாவல். வெகு வேகமாய் ஓடச் செய்த அந்த நாவலில் நீலகிரி காட்சிகளை, நின்று நிலைத்து விரிவாக வர்ணிக்கக் கல்கிக்கு வாய்ப்பு இல்லை. அங்கங்கே சில கோடுகளை அவசரமாய் வரைந்துதான் அவற்றை வர்ணிக்க முடிந்தது. ஆனால் கதையில் வரும் சச்சிதானந்த மடத்துத் தலைவர், மகானந்தரைக் கல்கி நண்பர் ருத்ரானந்தரை மனத்தில் கொண்டே படைத்துள்ளார் என்று ஊகிக்கலாம்.

மகானந்த சுவாமியார் பட்டினி போட்டு உடலை வருத்தும் கூட்டத்தைச் சேர்ந்தவர் அல்ல. நன்றாகச் சாப்பிட்டு, தேகாப்பியாசம் செய்து, திட சரீரம் பெற்றிருந்தால்தான் எந்தவிதமான தொண்டும் சரியாகச் செய்யலாம் என்ற கொள்கை உடையவர்.

இந்த வாக்கியங்கள் ருத்ரானந்தருக்கு முற்றிலும் பொருந்தும்.

இதன் தொடர்பாக, முன்பு பார்த்த கல்கியின் கடிதங்களில் ஆனந்திக்கு எழுதிய இரண்டாவது கடிதத்தின்

இதழூட்டும்
இன்ப
மணம்...




பூவிதழ் போல்
மென்மையான
லாக்டோ-
காலமைன்
லக்சரி டால்க்...
குளுமையான
காலமைன்
கலந்தது...மேனிக்கு
இதமூட்டும்.
நாளெல்லாம் நீடித்த
புதுமணம்...உமக்கே
சொந்தம்.



க்ரூக்ஸ்
லாக்டோ-காலமைன்
லக்சரி டால்க்

டூபர்-இண்டர்:.ப்ரான் லிமிடெட், பம்பாய் 400 018

வேறொரு பகுதியைப் பார்க்கலாம். மடத்தின் ஆகார வசதிகள் பற்றியது அது:

ஊரில் காலையில் எல்லோருக்கும் முதலில் எழுந்திருந்து, ''காப்பி ஏன் ஆகவில்லை ?'' என்று அம்மாவை விரட்டுகிறேன், அல்லவா? இங்கே அப்படியில்லை. ஏழு மணிக்குத்தான் எழுந்திருக்கிறேன். அதற்குள் காப்பி தயாரா யிருப்பதால், அவசரம் அவசரமாய்ப் பல் தேய்த்துவிட்டுப் போய்க் காப்பி சாப்பிடு கிறேன். காப்பியுடன், உப்புமா, தோசை, ரொட்டி ஏதாவது கொஞ்சம் கொடுக் கிறார்கள். பிறகு எட்டு மணிக்கு நடக்கத் தொடங்கி, மலை காடு மேடு பள்ளம் எல்லாம் சுற்றிவிட்டுப் பத்து மணிக்குத் திரும்பிவிடு கிறேன். பிறகு, ஸ்நானம் செய்துவிட்டு ஏதாவது கொஞ்சம் வாசிக்க ஆரம்பித்தால், அதற்குள் பன்னிரண்டு மணி ஆகிவிடுகிறது. சாப்பாட்டுக்குப் போக வேண்டும். குழம்பு, ரசம், கறி, வறுவல், மோர், பிரசாதம் — இவைகளுடன் சாப்பாடு பலந்தான்.

சாப்பாட்டுக்குப் பிறகு கொஞ்சம் ஸ்வாமிகளுடன் பேசிக் கொண்டிருந்துவிட்டு, படுத்துக் கொண்டால், மூன்றரை மணிக்கு எழுந்திருக்கிறேன். நாலு மணிக்கு டீ. பிறகு மறுபடியும் நடக்கப் போகிறேன். ஆறு மணிக்குத் திரும்பி வந்து பிரார்த்தனை செய்து விட்டுச் சற்றுப் பத்திரிகை வாசித்தால், எட்டரை மணிக்குச் சாப்பாட்டு மணி அடிக் கிறது !

நல்ல மடப்பளி ஒன்று அந்த மடத் தில் இருந்திருக்கிறது என்பது இதி லிருந்து தெரிகிறது. மடப்பளி வயிற் றுக்கு அளித்த உணவையும், மடமும் மடத்தாரும் உள்ளத்துக்கு அளித்த அமைதியையும், இரண்டு தடவை களுக்கு மேல் கல்கி அனுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லை. ருத்ரானந்தர் பீஜித் தீவுக்குப் போய்விட்டது அதற்கு ஒரு காரணம். நீலகிரியின் குளிரைக் கல்கியால் தாங்க முடியாமல் போனது மற்றொரு காரணம். ''கட்டு மூட்டை'' என்ற அவருடைய கட்டுரையிலிருந்து இதை ஊகிக்கலாம்.

இந்தியாவிலேயே கோடை கால வாசஸ்தலங்களுள், உதகமண்டலந்தான் தலைமை வகிக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை. ரயில்வே விளம்பரங்கள் அப்படித் தான் சொல்கின்றன. எட்டாயிரம் அடி தலைமை வகிக்காவிட்டால், ஐயாயிரம் அடி யும் ஆறாயிரம் அடியும் எப்படித் தலைமை வகிக்க முடியும் ?

நீலகிரியில் வசிப்பது தேகத்துக்கு ஆரோக் கியமும், மனத்துக்கு உற்சாகமும் அளிக்க வல்லது. ஆனால் இதை நீங்கள் மறந்து விடாமல் அடிக்கடி ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். ஞாபகப்படுத்திக் கொள்ள அவ சியமும் அடிக்கடி நேரும். போன புதிதில், பாதங்களின் ஓரங்கள் எல்லாம் வெடித்து விடும். எப்போதும் காலுறை போட்டுக் கொண்டும், வெறுங் காலுடன் நடக்காமலும் வெகு ஜாக்கிரதையாய் இருந்தால் தப்பலாம். அப்புறம், வாயு தேகிகளுக்கு முழங்கால் முட்டிப் பிடிப்பு வந்தாலும் வந்துவிடும். உதடுகளோ கோடைகால வயல்களைப் போல் பிளந்து போகும். அப்போதெல்லாம், ''ஆரோக்கியம்'', ''ஆரோக்கியம்'' என்று உருப் போட்டுக் கொண்டாலொழியக் கொஞ் சம் கஷ்டமாய்த்தான் இருக்கும். அது போலவே, இரவு நேரங்களில் குளிரால் நடுங்கிக் கொண்டு தூக்கம் வராமல் கஷ்டப் படும் போதும், ''உற்சாகம், உற்சாகம்'' என்றுஉச்சஸ்வரத்தில் கோஷிப்பது அவசியம்.

(ஆ.வி.—5-4-'36)

பின்னர் கல்கிக்குக் குற்றாலமே விடு முறைக்கு ஏற்ற இடமாயிற்று. அங்கே மலை, காற்று, குளிர்ச்சி எல்லாமுமே அவருக்குத் தக்கபடி மிதமாயும் இத மாயும் இருந்தன. இதயம் கலந்து பேசி, கவி இன்பம் ஊட்ட ரசிகமணியும் இருந்தார். (தொடரும்)

---





# பரீட்சை!

ஊரிலிருந்து என் பெண் பத்மா கடிதம் எழுதியிருந்தாள். வழக்கம் போல் வீட்டிலும் பண்ணையிலும் எல்லோர் நலனையும் கேட்டு எழுதிய பின்னர் முக்கியமான ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டிருந்தாள். தனக்கு பம்பாயில் நம்பகமான ஒரு வேலைக்காரனோ வேலைக்காரியோ கிடைக்கவில்லை என்றும் ஊரிலிருந்து யாரையாவது உடனே அனுப்பி வைக்கும்படியும் எழுதியிருந்தாள்.

பம்பாய்க்கு அவள் போய் ஆறு மாதங்கள் தான் ஆகின்றன. என் மாப்பிள்ளைக்கு ரயில்வேயில் அதிகாரி வேலை. அடிக்கடி 'டூர்' போகிற உத்தியோகம். வீட்டோடு இருந்து பொறுப்பாகப் பார்த்துக் கொள்ள ஒரு பணியாள் தேவைப்பட்டது. இதுவரையில் நான்கு பேர்களை வைத்துப் பார்த்தாகிவிட்டதாம். இதுவரை இருந்தவர்களுக்குக் கை சுத்தம் இல்லை. வீட்டில் உள்ள பண்டங்கள் குறைந்ததோடு மட்டுமல்லாமல், கடைத் தெருவுக்குச் சாமான்கள் வாங்கி வர அனுப்பி வைத்தால், ஒரு ரூபாய்க்கு இருபது காசுகளாவது ஏப்பம் விட்டு விடுகிறார்கள் என்று எழுதியிருந்தாள்.

எங்கள் பண்ணையில் எத்தனையோ ஆட்கள் இருந்தார்கள். கிலோ அரிசி நான்கு ரூபாய்களுக்கு மேல் விற்கும் இந் நாட்களில், வேளா வேளைக்குச் சாப்பாடு போட்டுத் துணியும் வாங்கிக் கொடுத்துக் கைச் செலவுக்குக் காசும் தருவதாகச் சொல்லிக் கூப்பிட்டால் பம்பாய் என்ன, சந்திரமண்டலத்துக்குப் போகக் கூட ஆட்கள் கிடைப்பார்கள். இருந்தாலும் யாரை அனுப்புவது என்று நாங்கள்-என் கணவரும் நானும்தான்-யோசனைசெய்து பார்த்தோம். எல்லோருமே நல்லவர்களாக நாணயம் உள்ளவர்களாக ஒரு சமயம் தோன்றினார்கள். மற்றொரு சமயம் யாருமே பிரயோசனம் இல்லைபோல் பட்டது.

கடைசியாக அஞ்சலையையாவது ரத்தினத்தையாவது அனுப்புவது என்ற முடிவுக்கு வந்தோம்.

அஞ்சலைக்கு முப்பத்தைந்து வயது இருக்கும். யாருமே நாதி கிடையாது. திருமணமான மறு வருஷம் கணவனைப் பறி கொடுத்து விட்டுத் தனியாக இருப்பவள். பத்மா இங்கு இருந்தவரையில் 'சின்னம்மா! சின்னம்மா!' என்று உயிராக இருப்பாள். இப்போது எங்களுக்குச் சொந்தமான அரிசி மில்லில் அவளுக்கு வேலை. நாளைக்கே புறப்படச் சொன்னால்கூடப் புறப்பட்டுவிடுவாள். அவளிடம் ஒரே ஒரு கெட்ட பழக்கம் உண்டு. கவுளியாகத்தான் வெற்றிலை வாங்கிப் போடுவாள். கண்ட இடத்தில் துப்புவாள். அந்த வழக்கம் ஒன்றை மட்டும் கண்டித்துத் திருத்த வேண்டும். என் மாப்பிள்ளைக்கு வெற்றிலை போடுபவர்களைக் கண்டால் கட்டோடு பிடிக்காது. ''பல்லுக்குக் காவி பூசுபவர்கள்'' எனக் கேலியாகவும் கிண்டலாகவும் சொல்வதுண்டு.

மற்றொருத்தி ரத்தினம். நாற்பது வயதுக்கு மேல் இருக்கும். ஒரு பெண்ணையும்



வி. சரோஜா



பிள்ளையையும் பெற்றிருந்தும் கூட யாரும் அவளை இப்போது கவனிக்கவில்லை. பிள்ளை எவளோ ஒருத்தியுடன் தனியாகக் குடித்தனம் நடத்துகிறான். பெண் பெரிய சம்சாரி.. தீபாவளிக்கும் பொங்கலுக்கும் மட்டும் ஆத்தாளைத் தேடி வந்து வரிசைப் பணத்துடனும் போக வரப் பஸ் கட்டணத்தையும் வாங்கிப் போவதுடன் சரி. இன்று பத்மாவுக்கு முழங்கால் வரை தொங்கும் நீண்ட கூந்தல் அவள் வளர்த்ததுதான். ஒரு வெள்ளி, ஒரு செவ்வாய் விடமாட்டாள். பத்மாவை இழுத்து உட்கார வைத்து எண்ணெய் தேய்த்து விடுவாள். என்ன முரண்டு செய்தாலும் விடமாட்டாள். பத்மா சிறியவளாக இருந்த போது அவள் கையால் எத்தனையோ அடி, உதை வாங்கியிருக்கிறாள். பாவம்! இவளிடமும் ஒரு கெட்ட பழக்கம் உண்டு! இரண்டு நாட்களுக்கு ஒரு முறையாவது சினிமாப் பார்க்க வேண்டும். பார்த்த படத்தையே திருப்பித் திருப்பிப் பார்ப்பாள். பம்பாய்க்கு அனுப்பினால் அந்த வெறி அவளுக்கு அடங்குமோ, அதிகமாகுமோ?

நான் அஞ்சலையை அனுப்பலாம் என்றால் அவர் ரத்தினம்தான் லாயக்கு என்றார். பத்மாவுக்கு எழுதிக் கேட்டோம். இரண்டாம் நாளே பதில் வந்தது. யாரையாவது உடனே அனுப்ப வேண்டுமாம். பக்கத்துக் 'குவார்ட்டர்ஸ்'களில் கூட மனிதர்கள் கிடையாதாம். தனியாக இருக்கப் பயமாக இருக்கிறது என எழுதியிருந்தாள் குழந்தை.

''சரி, சரோஜா, நான் இவர்களுக்கு ஒரு பரீட்சை வைக்கிறேன். எவள் தேறுகிறாளோ, அவளையே அனுப்பலாம்!'' என்றார் இவர் முடிவாக.

''என்ன பரீட்சை?'' என்று விசாரித்தேன்.

''கை சுத்தமாக இருக்க வேண்டும் என்று பத்மா எழுதியிருக்கிறாள். நம் வீட்டில் இவர்களைக் கண்காணிக்க ஆட்கள் இருக்கிறார்கள். அங்கு இப்படி இல்லை, பார். அவர்கள் கை சுத்தமாக இருக்கிறதா, நெஞ்சு நேர்மையாக இருக்கிறதா என்பதைப் பார்த்துவிடலாமே?'' என்றார்.

நானும் என் சம்மதத்தைத் தெரிவித்தேன்.

தோட்டத்து 'அவுட்ஹவுஸை'த் திறந்தோம். நடு அறையில் நம் மணிபர்ஸைத் திறந்து ஒரு ரூபாய் சில்லறைக் காசுகளாக எடுத்துக் கீழே போட்டார். மீண்டும் கதவைத் தாளிட்டுப் பூட்டிச் சாவியைக் கையில் எடுத்துக் கொண்டு வீட்டுக்குத் திரும்பினோம்.

நான் அஞ்சலையைக் கூப்பிட்டு அனுப்பினேன். அவள் வந்தாள். ''அஞ்சலை! நம் தோட்டத்து வீட்டைத் திறந்து சுத்தமாகக் கூட்டிவிட்டு வா! ஐயாவுக்கு வேண்டியவங்க யாரோ வராங்களாம்!'' என்றேன். அவள் சாவியை வாங்கிக் கொண்டு போனாள்.

அரை மணி நேரம் கழித்துத் திரும்பி வந்த அஞ்சலை சாவியை என்னிடம் தந்தாள். எதுவுமே சொல்லாமல் திரும்பினாள். நான் ஏதோ பேச வாயெடுத்தேன். அவர் என்னை மௌனமாக இருக்கும்படி ஜாடை காட்டினார்.

மறுநாள் காலை நாங்கள் 'அவுட் ஹவுஸை'த் திறந்து பார்த்தோம். மிக மிக சுத்தமாக — ஓர் ஒட்டடை கூட இல்லாமல் வீடு கூட்டப்பட்டு இருந்தது. நாங்கள் போட்டு வைத்த சில்லறை நாணயங்களில் ஒன்றுகூட இல்லை.

''நீ பொறுக்கி செய்தாயே... அந்த அஞ்சலை, அவள் யோக்கியதையைப் பார்த்தாயா?'' என்று கேட்டார் அவர் குத்தலாக. நான் தலையைக் குனிந்து கொண்டேன். யாரைத்தான் நம்புவது?

அன்று மாலை அவர் புத்தம் புதிய ஒரு ரூபாய் நோட்டுக் கட்டு ஒன்றைப் பிரித்தார். பதினொரு நோட்டுக்களை மொத்தமாக உருவிக் கையில் வைத்துக் கொண்டு ரத்தினத்தைக் கூப்பிட்டார்.

''டவுனுக்குப் போய் இரண்டு கிலோ சர்க்கரை வாங்கி வா!'' என்றேன் நான். நோட்டுக்களை அப்படியே அவள் கையில் கொடுத்தேன்.

''இப்பவே வேணுங்களா?'' என்று கேட்டாள் ரத்தினம்.

''ஆமாம், ஆமாம். காலையில் காப்பிக்குக் கூடச் சர்க்கரை இல்லை. பஸ்ஸில் போய்விட்டு வா!'' என்றேன் நான்.

நாங்கள் பணம் கொடுத்து அனுப்பியபோது பகல் மங்கத் தொடங்கி விட்டது. பஸ் சரியாகக் கிடைத்ததோ இல்லையோ, இரவு பத்து மணிக்குத்தான் திரும்பி வந்தாள். சர்க்கரைப் பொட்டலங்களை என்னிடம் தந்தாள். ஒன்பது ரூபாய் இருபது காசுகளுக்குப் பில்லைக் கொடுத்தாள். போக வர பஸ்ஸுக்கு எண்பது காசுகள் ஆகியிருக்கும்.

''இந்தாங்க அம்மா ஒரு ரூபாய்... ஐயா கொடுத்த பணத்தில் ஒரு ரூபாய் கூட இருந்தது'' என்று தானாகக் கொடுத்தாள்.

நான் அவளை வியப்புடன் பார்த்தேன். பக்கத்து அறையில் நின்று இதையெல்லாம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த என் கணவர், ''அதை அவளிடம் திருப்பிக் கொடு. இனாமாக இருக்கட்டும்!'' என்றார். ''எப்படி இவள் நேர்மை?'' என்று என்னைத் தம் விழிகளாலேயே வினவினார்.

அப்புறம் என்ன? மறுநாள் பகல் பஸ்ஸிலேயே ரத்தினத்தைக் கணக்குப்பிள்ளையுடன் சென்னைக்கு அனுப்பி அங்கிருந்து பம்பாய்க்கு ரயில் ஏற்றிவிடச் சொன்னோம். பத்மாவுக்குத் தந்தி கொடுத்தாகி விட்டது.

எனக்கு அஞ்சலையைப் பார்க்கவே பிடிக்கவில்லை. அவள் வீட்டுக்குள் வந்தபோதெல்லாம் முகத்தைத் திருப்பிக் கொண்டேன். கேவலம் ஒரு ரூபாய்க் காசு. சே! கூடிய சீக்கிரம் அவளை வேலையை விட்டு நிறுத்த வேண்டும் என்ற எண்ணம் என் நெஞ்சில் வேரூன்றத் தொடங்கி விட்டது.

''தோட்டத்து வீட்டுக்கு விருந்தாளிங்க வரப் போறதாகச் சொன்னீங்களே! இன்னும் வரலையா?'' எனக் கேட்டாள் அஞ்சலை.

நான் கோபத்துடன் திரும்பினேன். ''உனக்கு என்ன அதைப் பற்றி? நீ கூட்டி வைத்த இடம் வீணாகப் போகிறதே என்ற ஏக்கமா?'' எனக் கேட்டேன், குத்தலாக.

''நான் எங்கே அம்மா கூட்டினேன்?... சாவியை வாங்கிப் போனேனா? வழியிலே

கணக்குப்பிள்ளை அவசரம் அவசரமா மில்லுக்கு அனுப்பினாரு. நீங்க கூட்டச் சொன்னதாகச் சொன்னேன். அவரே அங்கே இருந்த ரத்தினத்தைக் கூப்பிட்டு அந்த வேலையைச் செய்யச் சொன்னாரு... மில்லுக்குப் போய்த் திரும்பி வரப்போ ரத்தினம் கூட்டி முடித்து வீட்டைப் பூட்டிக் கொண்டிருந்தாள். சாவியை வாங்கி நான் உங்களிடம் கொடுத்து விட்டுப் போனேன்.''

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. பேப்பர் படித்துக் கொண்டிருந்த என் கணவரும் திரும்பிப் பார்த்தார். அவர் முகத்திலும் ஈ ஆடவில்லை. அஞ்சலை பேசிக்கொண்டு போனாள்.

''ஏன் அம்மா! ரத்தினத்தைப் போய் பம்பாய்க்கு அனுப்பி இருக்கீங்களே!.... பயாஸ்கோப் பார்க்காட்டித் தூக்கம் வராதே அம்மா அதுக்கு... ஊருக்குப் புறப்படற முதல் நாள் கூடப் படம் பார்க்கப் புறப்பட்டுக் கொண்டிருந்தா... டவுனுக்குச் சர்க்கரை வாங்க நீங்க அனுப்பினீங்களா? என்ன செய்வதுன்னு தெரியாமே முழிச்சா. மாட்டுக்குப் பொட்டு வாங்க நான் டவுனுக்குப் போயிக்கிட்டு இருந்தேன். அப்படியே சர்க்கரையும் வாங்கியாந்தேன்... ஏன் அம்மா! ரூபாயைச் சரியாக எண்ணிப் பார்க்க வேண்டாம்? நல்லவேளை... நான் எண்ணிப் பார்த்தேன். ஒரு ரூபாய் கூட இருந்திச்சு... சர்க்கரைப் பொட்டலமும் ஒரு ரூபாய் காசும் திருப்பிக் கொடுத்திருப்பாளே... நானே கொண்டு வந்து கொடுத்திருப்பேன்... நீங்க கோபிப்பீங்கனு அவள் சினிமா முடிஞ்ச பிறகு வீட்டாண்டை வந்து வாங்கிப் போனா...''

எனக்குத் தலை சுற்றியது. ரத்தினத்துக்கு இதில்கூட எண்பது பைசா லாபமா? அவர் கொடுத்த இரும் வேறு.

பரீட்சை வைத்த அவரும், துணை நின்ற நானும் ஒருவரை யொருவர் பார்த்து விழித்தோம். யார் பாஸோ யார் பெயிலோ எங்கள் இருவருக்கும் கிடைத்த மதிப்பெண் பூஜ்யம் தான். இத்தனை நேரம் நாங்கள் சோதனை செய்து 'நம்பகமாக'ப் பொறுக்கி அனுப்பிய ரத்தினம் பத்மாவிடம் போய்ச் சேர்ந்திருப்பாள்!

# வட்ட மேஜை

''தோசை விலை குறையுமா'' என்ற கட்டுரையில் முரளி கஃபே திரு வெங்கடேசுவரன் அவர்களின் வாதம் குழந்தைகளுக்குச் சொல்லப்படும் கதைபோலவே உள்ளது. அவர் வாதப்படி ஒரு கஸ்டமருக்கு நாலு ஆட்கள், ஒன்பது பாத்திரம், மேஜை நாற்காலி என்பதெல்லாம் குழந்தை வாதம். ஹோட்டல்களில் ஒரு டேபிளில் ஒரு சமயத்தில் குறைந்தபட்சம் நான்கு பேரும் அதிகபட்சம் ஆறு பேரும் அமர்கின்றனர். இப்படி அடுத்தடுத்துப் பல ஆறு பேர்கள் அமர்கின்றனர். பாத்திரங்களை மிகப் பெரிய ஹோட்டலாக இருந்தால் குறைந்தபட்சம் ஒரு நாளைக்கு இருநூறு பேராவது உபயோகிக்கிறார்கள். இவைகள் ''நான்-ரெக்கரிங்'' என்ற செலவினங்களைச் சேர்ந்தவை. திரு எம். கே. சீனிவாசன் இவற்றின் விலை குறைவுக்காகப் போராடவில்லை. தின்பண்டங்களின் விலை குறைவுதான் அவர் நோக்கம்.

சென்னை—5
1—4—75 தி. ச. இராசகோபாலன்

தோசை விலை குறையுமா? என்ற தலைப்பில் வந்த விஷயத்தைப் படித்தேன். ஹோட்டல் தொழிலில் ஊசிப் போகிற சாமான்கள் மிஞ்சினாலும் நஷ்டம். பற்றாக்குறையானாலும் நஷ்டம். இது பேட்டியில் குறிப்பிடப்படவில்லை. திரு எம். கே. சீனிவாசன் போன்றோர் செய்யக்கூடிய பெரிய பணி என்ன வென்றால் பெர்மிட் கோட்டா லைசென்ஸ் எதிர்ப்பு இயக்கம் நடத்திச் சகலவிதமான அரசு — அரசியல் தலையீடுகளிலிருந்தும் ஹோட்டல் தொழிலுக்கு விடுதலை பெற்றுத் தர வேண்டும்.

விட்டலபுரம்
30—3—75 வேங்கடாச்சாரி

நமது மாநில முதலமைச்சர் அவர்களால் வறட்சி நிவாரண நிதிதொடங்கப்பட்டவுடன் தமிழகத்தில் உள்ள ஆலயங்கள் மிக சுறுசுறுப்பாக நன்கொடை அளித்து வருவதிலிருந்தே சர்க்காரும், ஆளும் கட்சியினரும் ஆலய நிர்வாகத்தை எத்தகைய இரும்புப் பிடியில் வைத்திருக்கிறார்கள் என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளலாம். பசுமைப் புரட்சி இருக்கிறபோது மக்களைக் கசக்கிப் பிழிந்து வரிப் பணம் கறப்பதை உரிமையாகக் கருதுகின்ற மத்திய, மாநில அரசுகள் வறட்சி ஏற்படும்போது நிவாரண நடவடிக்கைகளுக்கு அரசு கஜானாவிலிருந்து செலவழிப்பதுதான் கடமையாகும். மேலும், மத்திய நிதி அமைச்சருக்கும் மாநில முதலமைச்சருக்கும் இடையே ஏற்பட்ட சொந்த, அரசியல் மோதல்கள் காரணமாக இந்த வறட்சி நிவாரண நிதி தொடங்கப்பட்டுள்ளபோது இத்தகைய அரசியல் மாற்சரியங்களிலிருந்து ஒதுங்கி நிற்பது தான் ஆலய நிர்வாக நலன்களுக்கும் சமய வளர்ச்சிக்கும் உகந்தது. அதை விடுத்து அரசாங்கத்தினுடைய இஷ்டத்துக்கெல்லாம் ஆலய நிதிகளை ஒதுக்கும் டிரஸ்டிகளினுடைய போக்கை இந்து ஆலயப் பாதுகாப்புக் கமிட்டி வன்மையாகக் கண்டிக்கிறது.

சேலம்—1
28—3—75 எம். இராமஸ்வாமி
மாநில செயலாளர், தமிழ் நாடு இந்து ஆலயப் பாதுகாப்புக் கமிட்டி

'சோ'வின் நாடகம் முடிந்தது. உண்மைக்கும், பொய்மைக்கும் நடந்த பெரிய யுத்தத்தின் முடிவுபோல் இருந்தது. முடிவு மிகவும் நன்றாக இருந்தது. சோவுக்கும், உங்களுக்கும் என் நன்றி.

காஞ்சிபுரம்
4—4—75 பவானி ராஜன்

(மாதிரிக்கு ஒன்று என்ற முறையில் இக் கடிதம் பிரசுரமாகிறது. 'சோ'வின் நாடகத்தைப் பாராட்டி எழுதிய ஏராளமான பேர்களுக்கு நன்றி. - ஆர்)

# இணையற்ற பரிசுகளை வென்றிட உங்களை அழைக்கிறது

# தஞ்சாவூர் பர்மனெண்ட் பாங்க்

டெபாசிட் சேகரிப்பு மாதமான ஏப்ரல்-1975ல்
டெபாசிட் செய்வோருக்கு இப்பரிசுகளை வென்றிட
வாய்ப்பு உண்டு.

சிறப்பு அம்சங்கள் :

1) உங்கள் முதலீட்டிற்கு உயர்ந்த வட்டி விகிதங்கள்
2) ஒவ்வொரு கிளையிலும் டெபாசிட் செய்யும் ஒவ்வொருவருக்கும் ஒரு வெகுமதிப் பொருள் தரப்படும். இது தவிர, ஒரு கவர்ச்சிமிக்க பரிசும் உண்டு.
3) ரூ. 1,000 – மற்றும் அதற்கு மேலும் ஒரு வருடத்திற்கும் அதற்கு மேற்பட்ட காலங்களுக்கும் அல்லது ரூ. 500 - மற்றும் அதற்கு மேலும் 2 வருடங்கள் மற்றும் அதற்கு மேற்பட்ட காலங்களுக்கும் டெபாசிட் செய்வோருக்கு [எல்லா கிளைகளுக்கும் பொதுவான] கீழ்க்கண்ட பரிசுகளை வழங்குகிறோம்.







**ஒரு முதல் பரிசு: ராயல் என்பீல்ட் புல்லட் மோட்டார் சைக்கிள்.**
**இரண்டு - இரண்டாம் பரிசுகள்: மினிரெப்ரிஜிரேட்டர்கள்**
**மூன்று - மூன்றும் பரிசுகள் : ஸ்டீல் அலமாரிகள்.**
**பத்து - நான்காம் பரிசுகள்: டிரான்ஸிஸ்டர் ரேடியோக்கள்.**

முழு விபரங்களுக்கு எமது எண்பது கிளைகளில் ஏதேனும்
ஒன்றுடன் தொடர்பு கொள்ளுங்கள்
இன்றே முதலீடு செய்யுங்கள்.
உயர்ந்த வட்டி பெறுங்கள். பரிசுகளையும் வென்றிடுங்கள்.

## தஞ்சாவூர் பர்மனெண்ட் பாங்க் லிட்.,

பதிவு அலுவலகம் : தஞ்சாவூர்-613001

R. சொக்கப்பா
செக்ரட்டரி

B. K. மாதவன்
சேர்மன்

சக்தி TPB-308

# ஆனந்தமான பலன்



இவ்வொரு வருடமும் புத்தாண்டு தினம் நானும், என் சகாக்களும் நகைச் சுவை கொண்டாடும் தினம். அன்று நாங்கள் புத்தாண்டுப் பஞ்சாங்கங்கள் பலவற்றையும் வாங்கிப் படித்துத் தமாஷ் அனுபவிப்போம்.

புத்தாண்டைப் பற்றி ஒவ்வொரு பஞ்சாங்கமும் கூறியுள்ள பலாபலன்களைப் பற்றிப் படித்துத்தான்!

உதாரணமாக, மகர சங்கராந்தி தேவதை சென்ற ஆண்டு எப்படி இருந்தாள், என்ன செய்தாள் தெரியுமா?

''ஸ்திரீ புருஷ ரூபமாய், இரண்டு முகங்களும், மூன்று கண்களும், நான்குவாய்களும், சிவப்புப் பற்களும், நீண்ட நாக்கும் ...... உள்ளவளாய், 12 யோசனை பருமனும், 100 யோசனை உயரமுமுள்ளவளுமான மஹோதரி என்ற திவ்யமான நாமதேயம் உள்ள ஒரு பன்றி வாகனத்தின் மீது ஏறி 'ஜம்' என்று உட்கார்ந்து கொண்டு தென் திசை நோக்கிச் சென்றாள்....''

இது கிடக்கட்டும். பஞ்சாங்கம் கூறும் பலன்கள் நிறைவேறியதா இல்லையா என்பதை அந்தந்த ஆண்டின் முடிவில்தானே கவனிக்க முடியும்? சென்ற 'ஆனந்த' ஆண்டைப் பற்றி

''ஆனந்த வாண்டதனி
லாகாத தொன்றுமில்லை
வானம் பொழியும்....''

என்று பாடல் தரப்பட்டிருக்கிறது. இதைப் பற்றிச் சந்தேக மேற்படாததற்காக, பின்வருமாறு அடித்துச் சொல்லப்பட்டிருக்கிறது:

சந்திரன் தான்யாதிபதியாயிருப்பதால் **மழை அதிகமாகப் பெய்யும்;** திருவாதிரையில் சூரியன் பிரவேசிப்பதால் **மழை பூர்ணமாகப் பெய்யும்.** சேஷ்ட சுத்த பிரதமையின் பலனாக **மழை பூர்ணமாகப் பெய்து** பயிர்கள் நன்றாக விளையும்.

ஆஷாட சுத்த பஞ்சமியின் பலனாக **மழை மிகவும் நன்றாகப் பெய்து** பயிர்கள் நன்றாக விளையும்.

புஷ்ய அமாவாசை, ஆஷா சுத்த நவமி இவற்றின் பலனாக **மழை சக்கைப் போடு போடும்.**

எமன் பசுநாயகராகவும், சனி மேகாதிபதியாகவும் இருப்பதால் மழை மிக நன்றாகப் பெய்து, பயிர்கள் **சம்பூர்ணமாக விளையும்.** சாமான்கள் விலைகள் குறைவு பட்டே விற்கும்.

இந்த ஜோசியங்களின்படி மழை பொழிந்திருந்தால், பொழிவது கிடக்கட்டும், ஓரளவு பெய்திருந்தால்கூட டாக்டர், கலைஞர் கருணாநிதி என்ற தமிழ் நாடு முதல்வரும் அன்புப் பட்டங்கள் ஒன்றுமே இல்லாத வெறும் சி. சுப்பிரமணியம் என்ற மத்திய அரசாங்க நிதி அமைச்சரும் 'வறட்சி நிவாரண நிதி'யைப் பற்றி வாதப் பிரதிவாத நாடகம் நடத்தும்படி நேர்ந்திராதே!

குதிரை கீழே தள்ளியது மல்லாமல் என்னமோ செய்ததாம். அது மாதிரி மழையைப் பற்றிய பலன் கூறியதோடு பஞ்சாங்கங்கள் நிற்கவில்லை.

'அரசாங்கத்தார் நீதி வழிகளில் ஈடுபடுவார்கள்!' என்று வேறு கூறுகின்றன. இப்படித் தங்கள் மீது அபாண்டம் கூறுவதற்காக அரசாங்கங்கள் அவற்றைப் பிரகரிப்பவர்கள் மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும்! — அநாமதேயம்

# தம்பட்டத் திறமை!



அண்ணா மேம்பாலத்துக்கு இரு பக்கத்திலும் ஒரே மாதிரியான இந்தக் குதிரைச் சிலைகளை வைத்தது நகரை அழகுபடுத்த என்று நினைத்தோம். இல்லை, அவையும் முதல்வரின் சாதனைகளைக் குறிப்பனதான் என்பதாகக் கல்லில் பொறித்தும் பதித்து விட்டார்கள்!

குதிரைப் பந்தயத்துக்கு முடிவுகட்ட தி. மு. க. அரசுதான் தீர்மானித்தது என்பதன் நினைவாக உருவாக்கப்பட்டனவாம் இவை.

போகிறது. பலர் பயந்ததுபோல் அல்லது ஆசையோடு நம்பியதுபோல் — குதிரைப் பந்தயத்துக்கு மீண்டும் தி. மு. க. அரசு அனுமதி வழங்கி விடாது என்பது இதன் மூலம் நிச்சயமாகி விட்டது. அந்த அளவில் இந்தத் தம்பட்டத் திறமைக்குத் தலை வணங்குவோம்!

டாக்டர்கள் கூறுகிறார்கள்:

# 3 மாதங்கள் ஆன பிறகு, முழுமையான உடல் வளர்ச்சி பெற உங்கள் குழந்தைக்குத் தேவை திட உணவு.



**பாரெக்ஸ்**
உங்கள் குழந்தை சீராக வளர்ந்திட அனைத்தையும் அளிப்பதைப் பாருங்கள்: எளிதில் சீரணிக்கக்கூடிய புரதம். கூடவே வைட்டமின், கால்ஷியம், இரும்புச் சத்து மற்றும் கார்போஹைட்ரேட்.

3 மாதங்கள் முதல் 3 ஆண்டுகள் வரை உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு அவசியம் பாரெக்ஸ்.

| குழந்தையின் வயது | பாரெக்ஸ் அளவு |
|---|---|
| 3 – 6 மாதங்கள் | 1 – 2 தேக்கரண்டியளவு – தினம் இருமுறை |
| 6 – 9 மாதங்கள் | 3 – 4 தேக்கரண்டியளவு – தினம் மூன்று முறை |
| 9 மாதங்கள் – 3 ஆண்டுகள் | 4 – 6 தேக்கரண்டியளவு – தினம் நான்கு முறை |



உங்கள் பாரெக்ஸ் புத்தகத்தை இலவசமாகப் பெற, 25 பைசா தபால் தலை இணைத்து எழுதுக:
டிபார்ட்மெண்ட் K-1, த.பெ. 16558, பம்பாய் 400 025
(எந்த மொழியில் வேண்டுமென்று தெரிவிக்கவும்).

**பாரெக்ஸ்®**
*கிளாக்ஸோ தயாரிப்பு!*



சீரான உடல் வளர்ச்சிக்குக் குழந்தையின் முதலாவது திட உணவு

CMGF-42-104 TM



# தலைவர் தரிசனம்–14

# எம். ஜி. ஆர்.

ஏறத்தாழ இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்னால், எம். ஜி. ஆர். அவர்களுடன் எனக்குத் தொடர்பு ஏற்பட்டது. நாடகக் குழுவின் நிர்வாகி என்ற முறையில் அவருக்கு அறிமுகமான நான் இன்று அவருடைய நல்லதொரு தொண்டனாக வளர்ந்திருப்பதற்குக் காரணம் அவருடைய பண்பும் அன்பும் கலந்த மனோபாவம்தான்.

பழகுபவர்களின் உள்ளத்தில் சத்திய உணர்வு இருக்கிறது என்று தீர்மானித்து விட்டாரானால், அவரை உடனே தம் நண்பராக ஏற்றுக் கொண்டுவிடுவார். கருத்து வேற்றுமை கொண்டவர்களாக இருந்தாலும் அத்தகைய நண்பர்களை மதித்துப் பாராட்டுவார். இதற்குச் சான்று நண்பர் கோவை செழியனிடம் இவர் கொண்ட நட்பு.

நண்பர் செழியன் அந்த நாட்களில் ஒரு தீவிர தொழிற்சங்கவாதி. இப்போது ஒரு தயாரிப்பாளராக மாறி விட்டிருந்தாலும், அந்தக் காலத்தில் திரைப்பட உலகைப் பற்றி அவ்வளவாக நல்ல அபிப்பிராயம் கொள்ளாதவர். கோவை ராயல் தியேட்டரில் ஒரு பொதுக் கூட்டத்துக்கு ஏற்பாடாகி இருந்தது. அதில் கோவை ஸ்டுடியோ ஒன்றில் படப் பிடிப்புக்கு வந்திருந்த எம். ஜி. ஆர். அவர்களும் கலந்து கொண்டார். அவர் உள்பட வந்திருந்த முக்கிய பேச்சாளர்களுக்குக் கோவை செழியன் பத்து மைல்களுக்கு அப்பாலிருந்த தமது கிராமத்தில் ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தார். கூட்டம் முடிந்தவுடன் விருந்துக்குப் போவதாக ஏற்பாடு.

கூட்டம் ஆரம்பித்தவுடன் பேசிய செழியன் தம்மை மறந்து கொஞ்சம் ஆவேசமாகவே சினிமா உலகத்தைத் தாக்கினார். சினிமாக்காரர்கள் அரசியலில் பார்வையாளர்களாக இருக்கலாமே தவிர அங்கேயும் நாயகர்களாக வர விரும்பக் கூடாது என்று சாடினார். இத்தனைக்கும் அப்போது திரைப்பட வசனகர்த்தாவாக மலர்ந்து கொண்டிருந்த கலைஞர் கருணாநிதி அவர் நண்பர். அவர் மூலமாகத்தான் எம். ஜி. ஆர். அறிமுகம் கிடைத்தது.

செழியன் இப்படிப் பேச ஆரம்பித்ததும், எம். ஜி. ஆரின் நண்பர்கள், இவர் நிச்சயம் செழியன் ஏற்பாடு செய்திருக்கும் விருந்துக்குப் போகமாட்டார் என்று நினைத்து அவசரம்



## கோவை செழியன்

அவசரமாக மாற்று ஏற்பாடு செய்வதில் முனைந்தார்கள்.

கூட்டம் முடிந்ததும், எம். ஜி. ஆர். அவர்கள் கோவை செழியனை அப்படியே கட்டி அணைத்துப் பாராட்டினார். ''ரொம்ப நல்லாப் பேசினீங்க! சுவையான பேச்சு! உங்கள் நேர்மை எனக்குப் பிடித்திருந்தது. நான் இங்கு இருக்கிறேன் என்பதற்காக உங்கள் கருத்துக்களை மாற்றிக் கொள்ளாமல், உங்களுக்கு நியாயம் என்று பட்டதைச் சொன்னீங்க'' என்று பாராட்டினார். அவர் அளித்த விருந்துக்கும் போனார். எம். ஜி. ஆர். செழியன் இடையே இப்படித்தான் நட்பு வளர்ந்தது.

1971ம் ஆண்டு பொதுத் தேர்தலின்போது செழியனுக்கு, காங்கேயம் தொகுதியை ஒதுக்காமல், கோவைத் தொகுதியை ஒதுக்கலாமா என்று தலைமைப் பீடம் யோசித்து அது பற்றிக் கேட்கத் தூது அனுப்பிய போது, 'செழியனுக்குக் காங்கேயம் இல்லை என்றால், பறங்கிமலைக்குக்கூட வேறு ஆள் பார்த்துக் கொள்ளலாமே' என்று பதில் வந்தது மக்கள் திலகத்திடமிருந்து!

உதவி கேட்டு வருபவர் அந்த உதவிக்குத் தகுதியானவர் என்று மனத்தில் பட்டுவிட்டால் அள்ளிக் கொடுப்பார். நான்கு பேர் முன்னிலையில் யாராவது குழைந்து தம்மிடம் உதவி கேட்டால் அவர் மிகவும் வேதனைப்படுவார். தாம் உதவி செய்வது ஒரு விளம்பரமாகப் போய்விடுமே என்ற எண்ணத்தை அமுக்கிக் கொண்டு, கேட்பவர் ஒருவித சிறுமை உணர்ச்சிக்குப் பாத்திரமாகிவிடக் கூடாதே என்ற வருத்தம் மேலோங்கும்.

நல்ல காரியத்துக்கு உதவி அதனால் எதிர்பாராத சிக்கலில் இவர் மாட்டிக் கொண்டதும் உண்டு. சென்னை நகரில் திடீர் திடீர் என்று குடிசைப் பகுதிகளில் தீப் பிடித்து மக்கள் அவதிக்கு உள்ளான போது அறிஞர் அண்ணா தீப் பிடிக்காத வீடுகள் கட்டிக் கொடுக்கத் திட்டம் இட்டார். அந்தப் பணிக்கு மக்கள் திலகம் கணிசமான அளவில் உதவ விரும்பினார்.

ஒரு வெற்றிப் படத்துக்காகத் தமக்கு வர வேண்டிய ஊதியத்தில் ஒரு லட்ச ரூபாயை அப்படியே அண்ணாவின் திட்டத்துக்கு நன்கொடையாகக் கொடுக்கச் சொல்லிவிட்டார். இவர் வாங்கிக் கொள்ளவில்லை.

ஆனால் அந்த நிறுவனம் தொகையை நிதிக்கு அனுப்பிவிட்டுக் கணக்கில், அந்தத் தொகையை மக்கள் திலகத்துக்குக் கொடுத்ததாகக் காண்பித்து விட்டது. இவர் தமக்கான ஊதியத்தை வாங்கிக் கொண்டு பிறகு நன்கொடை கொடுத்தது போல் ஒரு தோற்றம் ஏற்பட்டுவிட்டது. இதனால் மக்கள் திலகம் வாங்காத லட்ச ரூபாய்க்கு வருமான வரி அதிகாரிகள், இவர் கணக்கில் இந்தப் பணம் வரவு வைக்கப்படவில்லை என்ற குற்றச்சாட்டுடன் வரி விதித்தார்கள். அபராதம் வேறு கட்டச் சொன்னார்கள் !

ஜாதி இன வேறுபாடு இல்லாமல் வாரி வழங்கி உதவி செய்யும் உதார குணத்தினாலேயே இவர் மக்களின் அன்பையும் ஆதரவையும் கவர்ந்தவர்.

கார் விபத்து ஒன்றில் தமிழ்நாடு முஸ்லீம் லீக் தொண்டர் ஒருவர் உயிரிழந்த போது உடனே அவர் குடும்பத்துக்கு இரண்டாயிரம் ரூபாய் கொடுத்து உதவினார்.

மக்கள் திலகத்தை வருமான வரி பாக்கி கட்டச் சம்பந்தப்பட்ட இலாக்கா வற்புறுத்துகிறது என்று கேள்விப்பட்ட, முஸ்லீம் சமூகத்தைச் சேர்ந்த இளைஞர் ஒருவர் தம்முடைய வீடு நிலம் முதலியவற்றை விற்று நாற்பதினாயிரம் ரூபாய்களை மக்கள் திலகத்துக்கு அனுப்ப முன் வந்தார். அத்தனை அபிமானம் அந்த முஸ்லீம் இளைஞருக்கு. எம். ஜி. ஆர். அவர்கள் மிகவும் வற்புறுத்தி அந்த இளைஞரின் பண்பைப் பாராட்டி, அவர் செய்யவிருந்த காரியத்தைத் தடுத்து நிறுத்தினார்.

1962ம் ஆண்டு தேர்தல் நேரம். காஞ்சிபுரம் தொகுதி வோட்டுக்கள் எண்ணும் நாள். அன்று காலையில் மக்கள் திலகத்தின் அருமை மனைவியார், பல நாட்கள், சிறந்த மருத்துவத்தினால் பராமரிக்கப்பட்டு வந்தவர் காலமாகி விட்டார். தாங்க முடியாத சோகம். ஆனால் அன்று மாலை வெளியான தேர்தல் முடிவோ, மக்கள் திலகத்துக்கு மனைவியை இழந்த வருத்தத்தைவிடப் பன்மடங்கு அதிக வருத்தத்தைக் கொடுக்கக் கூடியதாக அமைந்துவிட்டது. ஆம் ! அறிஞர் அண்ணாவின் தோல்விதான் அதற்குக் காரணம். அன்றைக்கு இந்தத் தேர்தல் முடிவு கேட்டு அவர் மனம் வெதும்பியது போல் அதற்கு முன்பும், பின்பும் ஒரு வருத்தத்துக்கு ஆளானதில்லை.

இந்த அளவு வருத்தத்துக்கு ஈடான மகிழ்ச்சியையும் அவர் 1967 தேர்தலின் முடிவில் அனுபவித்தார். குண்டடி பட்டு மருத்துவ விடுதியில் மரணத்துடன் போராடிக் கொண்டிருந்த மக்கள் திலகம், தமிழக முதல்வராக அறிஞர் அண்ணா அமரப் போகிறார் என்ற செய்தி கேட்டு அடைந்த ஆனந்தத்துக்கு எல்லையே இல்லை.

ஆரம்ப நாட்களில் வாழ்க்கையில் தாம் பட்ட சிரமங்களை அவர் ஒருநாளும் மறந்ததில்லை. ஆகவே, ஏழைத் தொழிலாளிகளிடமும், உழைப்பாளிகளிடமும் அவருக்கு அலாதி ஈடுபாடு உண்டு. 1957–58ல் நாற்பதினாயிரம் ரூபாய்க்கு மேல் செலவழித்து ஏழைத் தொழிலாளர்களுக்கு மழைக் கோட்டுகள் வாங்கிக் கொடுத்தது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். 1971ம் ஆண்டில் 'ரிக்ஷாக்காரன்' படம் வெற்றி பெற்ற போது ரிக்ஷாக்காரர்களுக்கு மாற்று உதவி செய்யப் பத்தாயிரம் ரூபாய் நிதி வழங்கியவரும் இவர்தான்.

நியாயத்துக்காகவும், நேர்மைக்காகவும் ஊழலற்ற ஆட்சிக்காகவும் பொங்கி எழும் மக்கள் திலகம் ஆரம்ப நாட்களிலிருந்தே அமரர் அண்ணாவின் மனத்தைக் கவர்ந்தவர். அவரது அன்பையும் ஆசியையும் தம் மனத்துள் சிறை செய்து கொண்டவர்.

கேட்டு எழுதியவர்: **கோமதிசுவாமிநாதன்**

மேலட்டை வண்ணப்படம்:

**கே. ஆர். வி. பக்தா**

## அடுத்த இதழில்...



**படித்தோம் சொல்கிறோம்**

முதல்வரின் மேடைப் பேச்சுத் தொகுப்பு முதல் குழந்தைகளுக்கான புத்தகம் வரை பல புதிய நூல்கள் விவாதிக்கப்படுகின்றன.



**சிறு கதை**

**அறுபதில் ஒரு தேன் நிலவு**

**—பீஷ்மன்**

**மனிதனுக்குக் கூண்டு மிருகத்துக்கு விடுதலை!**

இந்த நவீன மிருகக் காட்சி சாலை இந்தவிதமாகத்தான் இயங்குகிறது!

(வண்ணப் படத்துடன்)





நாலாம் பாகம்

சிதைந்த கனவு

# சிவகாமியின் சபதம்





அமரர்

கல்கி




இன்றைக்கு ஆயிரத்து முந்நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னால் மகேந்திர பல்லவ சக்கரவர்த்தி காஞ்சியில் அரசு புரிந்து வந்த காலத்தில் பல்லவ சாம்ராஜ்யம் தெற்கே பாண்டியநாட்டு எல்லையிலிருந்து வடக்கே கோதாவரிக்கரை வரையில் பரவி யிருக்கிறது.

சோழநாட்டு இளைஞன் பரஞ்சோதி, திருநாவுக்கரசர் மடத்தில் சேர்ந்து தமிழ்க் கல்வி கற்க வந்தவன், வழியில் புத்த பிக்ஷுவைச் சந்தித்து அவருடன் காஞ்சிக் கோட்டைக்குள் நுழைகிறான். வாதாபி மன்னன் புலிகேசியின் படையெடுப்பின் காரணமாகச் சிவகாமியின் நடன அரங்கேற்றம் தடைப்பட்டதும் அதே தினத்தில்தான். பரஞ்சோதி அன்றிரவு காவலர்களால் சிறைப்படுத்தப்படுகிறான். புத்தபிக்ஷு நாகநந்தி அவனைச் சிறையிலிருந்து தப்புவித்து விடுகிறார். ஆயனருக்கும் நாவுக்கரசருக்கும் ஓலை கொண்டு வந்திருந்த பரஞ்சோதி நாவுக்கரசர் காஞ்சியில் இல்லாததால் ஆயனரிடம் செல்லுகிறான். அஜந்தாவின் அழியாத வர்ணக்கலவை இரகசியத்தை அறிந்து வரும்பொருட்டும் பரஞ்சோதியை நாகநந்தியின் ஓலையுடன் ஆயனர் அனுப்புகிறார்.

ஓலையுடன் சென்ற பரஞ்சோதிக்கு வழியில் வஜ்ரபாகு பழக்கமாகிறான். பரஞ்சோதி அறியாமையால் எடுத்துச் சென்ற தேசத்துரோகமான ஓலை கை மாறிவிடுகிறது. வாதாபி வீரர்கள் பரஞ்சோதியைச் சிறைப்பிடித்துச் செல்லுகின்றனர். வஜ்ரபாகு பரஞ்சோதியை அவர்களிடமிருந்து விடுவித்துப் பல்லவ சைன்யத்துடன் சேர்க்கிறார்.

நரசிம்ம வர்மரைக் கோட்டையை விட்டு வெளியே போகக் கூடாதென்று உத்தரவிட்ட அவர் தந்தை மகேந்திரர் போர்க்களம் செல்கிறார்.

அசோகபுரத்துப் புத்த விஹாரத்தில் தங்கியிருந்த ஆயனரும், சிவகாமியும் திருப்பாற்கடல் ஏரி உடைப்பினால் பெருகிய பெரும் வெள்ளத்தில் சிக்கித் தவிக்கின்றனர். அப்போது மாமல்லரும் மகேந்திரரின் ஒற்றர் படைத் தலைவருன குண்டோதரனும் அவர்களைக் காப்பாற்றி மண்டபப்பட்டுக் கிராமத்தில் கொண்டு போய்ச் சேர்க்கின்றனர்.

மந்திராலோசனையில் மாமல்லர் போர் பற்றிய நம் கருத்தைத் தெரிவித்தபோது சக்கரவர்த்தி பகைவர்களிடம் சிறைப்பட்டு விட்டார் என்ற அதிர்ச்சி தரும் செய்தி கேட்டு யாவரும் திடுக்கிடுகின்றனர். அச்சமயம் சக்கரவர்த்தி சபா மண்டபத்தில் பிரவேசித்து அனைவரையும் வியப்பில் ஆழ்த்துகிறார். பிறகு சக்கரவர்த்தி தாம் வஜ்ரபாகுவாக வேஷம் தரித்துப் புலிகேசியை நேரில் சந்தித்த விவரங்களைச் சொல்லுகிறார். நாகநந்தி புலிகேசியின் ஒற்றன் என்பதையும், அவனே தூதனாக வந்தவன் என்பதையும் உணர்ந்து அவையோர் திகைக்கின்றனர்.

மாமல்லர் காஞ்சிக் கோட்டையை விட்டு வெளியேறி எதிரிகளுடன் வீரப் போர் புரியத் துடிக்கிறார். மகேந்திரர் அதற்குச் சம்மதிக்கவில்லை; யுத்தத்தைத் தம் போக்கில் நடத்த மந்திரி மண்டலத்தாரிடம் அநுமதி கோருகிறார். காஞ்சி முற்றுகை ஆரம்பமாகிறது.

பாண்டியன், தன் சகோதரியை மாமல்லர் கல்யாணம் செய்து கொள்ள மறுத்ததன் காரணமாகப் பல்லவர் மீது கோபம் கொண்டு வாதாபி மன்னன் புலிகேசியுடன் சமாதான உடன்படிக்கை செய்துகொள்கிறான். இருவரும் விரைவில் மனமொத்த சிநேகிதர்களாகி விட்டனர்.

மகேந்திரருடைய சாகச யுத்த தந்திரங்களினால் வாதாபி சைன்யத்தினால் போரைச் சமாளிக்க முடியவில்லை. புலிகேசி மகேந்திரருக்குச் சமாதானத் தூது அனுப்புகிறார். இரு சக்கரவர்த்திகளும் சமாதானம் செய்து கொண்டு விருந்துண்ட பின்பு, பாதகப் புலிகேசி திடீரென்று காஞ்சியைத் தாக்கி மக்களைப் பயங்கரமாகத் துன்புறுத்திச் சிவகாமியைச் சிறையெடுத்துச் சென்று விடுகிறார். மகேந்திர சக்கரவர்த்தி மரண காயமடைந்து படுத்த படுக்கையாகிறார்.

வாதாபியில், தமிழ் நாட்டுப் பெண்கள் அடைந்த அவல நிலையைத் தவிர்ப்பதற்காகச் சிவகாமி நாற்சந்தி மூலையில் நடனமாடுகிறாள். நாகநந்தியின் தலையீட்டினால் அது தவிர்க்கப்படுகிறது. புலிகேசியும், நாகநந்தியும் சகோதரர்கள் என்னும் உண்மை சிவகாமிக்குத் தெரிய வருகிறது.

ஒற்றர் படைத்தலைவன் சத்ருக்னன்மூலம், சிவகாமியின் நிலைமை அறிந்து மாமல்லரும், பரஞ்சோதியும் மாறுவேடத்தில் வாதாபி நகரில் பிரவேசித்துச் சிவகாமியின் இருக்கையை அடைந்தனர். மாமல்லர் எவ்வளவோ வற்புறுத்தியும் சிவகாமி, வாதாபி நகரம் தீப்பற்றி எரிவதைப் பார்த்தால் அன்றித் தமிழ்நாட்டில் அடியெடுத்து வைக்க மாட்டேனென்று உறுதியாகக் கூறி மாமல்லரின் கடுங்கோபத்துக்கும், வெறுப்புக்கும் காரணமாகிறாள்.

மாமல்லருடன் சிவகாமி வரவில்லை என்பதை அறிந்ததும் மகேந்திரரின் உடல்நிலை கவலைக்கு இடமாகிறது. சக்கரவர்த்தி தம் மகன் மாமல்லனிடம், பாண்டிய ராஜகுமாரியை மணப்பதாக வாக்குறுதி பெறுகிறார்.

## முதல் அத்தியாயம்

# அரண்ய வீடு

ஆயனரின் அரண்ய வீட்டைச் சுற்றி மீண்டும் மரங்கள் செழித்து வளர்ந்து வானோங்கி நின்றன. நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் படர்ந்திருந்த கிளைகளில் பசுந் தழைகளும் இளந் தளிர்களும் அடர்ந்திருந்தன. சில விருட்சங்களில் மலர்கள் கொத்துக் கொத்தாய்க் குலுங்கின. இளங் காற்றின் மரக் கிளைகள் அசைந்து ஒன்றோடொன்று மோதியபோது உதிர்ந்த மலர்கள் பூமியில் ஆங்காங்கு புஷ்பக் கம்பளம் விரித்தது போல் கிடந்தன. அந்த மலர்களின் நறுமணம் நாற்புறமும் 'கம்' என்று நிறைந்திருந்தது.

கானகத்துப் பறவைகள் அவ்வப்போது கலகலவென்று ஒலி செய்து அங்கே குடிகொண்டிருந்த நிச்சப்தத்தைக் கலைத்தன.

ஆயனர் வீட்டுக்குச் சற்றுத் தூரத்தில் இருந்த தாமரைக் குளத்தில் தண்ணீர் ததும்பி அலைமோதிக் கொண்டிருந்தது. தாமரை இலைகள் தளதளவென்று விளங்கின. அந்த இலைகளின் மீது தண்ணீர்த் துளிகள் முத்துக்களைப் போல் தத்தளித்துக் கொண்டிருந்தன. இளங் காற்றில் தாமரை இலைகள் அசைந்தபோது அந்த ஒளி முத்துக்கள் அங்குமிங்கும் ஓடியது கண் கொள்ளாக் காட்சியாயிருந்தது.

இந்த இயற்கை அழகையெல்லாம் பார்த்து அநுபவிப்பதற்கு மனிதர்கள் மட்டும் அங்கே இல்லை.

ஆயனரின் அரண்ய வீட்டைச் சுற்றி முன்னொரு காலத்தில் நூற்றுக் கணக்கான சிற்பக் கலைச் சீடர்கள் வேலை செய்து கொண்டிருந்தார்கள். தற்சமயம் அங்கே சீடன் எவனும் காணப்படவில்லை.

அங்கே இப்போது குடிகொண்டிருந்த சூனியத்தின் வேதனையை இன்னும் அதிகப்படுத்தும்படியாக அரண்ய வீட்டுக்குள்ளிருந்து ஒரே ஒரு தனிக் கல்லுளியின் சத்தம் 'கல் கல்' என்று கேட்டுக் கொண்டிருந்தது.

ஆம்; வீட்டுக்குள் ஆயனச் சிற்பியார் மீண்டும் கையில் கல்லுளியை எடுத்து வேலை செய்து கொண்டிருந்தார்.

அருமைப் புதல்வியை ஆயனர் பறிகொடுத்து இப்போது ஒன்பது ஆண்டுகளுக்கு மேல் ஆகி விட்டன. இத்தனை காலமும் அவர் உயிர் வாழ முடிந்தது மீண்டும் சிற்பத் தொழிலில் கவனம் செலுத்திய காரணத்தினாலேதான்.

பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னே நாம் அந்தச் சிற்பக் கிருகத்தில் பார்த்ததைக் காட்டிலும் இப்போது அதிகமான நடனச் சிலைகளைப் பார்க்கிறோம். சிலை வடிவம் ஒவ்வொன்றும் சிவகாமியை நினைவூட்டுகின்றது.

மண்டபத்தின் சுவர்களிலே அந்த நாளில் நாம் பார்த்த சித்திரங்கள் எல்லாம் இப்போது நிறம் மங்கிப்போயிருக்கின்றன.

இதிலிருந்து அஜந்தா வர்ண இரகசியத்தை இன்னும் ஆயனர் தெரிந்து கொள்ளவில்லை என்று நாம் ஊகித்துக் கொள்ளலாம்.

ஆயனரின் உருவத் தோற்றத்திலும் பெரிய மாறுதலைக் காண்கிறோம். அவருடைய தலை ரோமம் தும்பைப் பூவைப் போல் வெளுத்துப் போயிருக்கிறது. கண்கள் குழி விழுந்திருக்கின்றன. முகத்திலே சுருக்கங்கள் காணப்படுகின்றன. அவரை இப்போது ஆயனக் கிழவர் என்று கூறினால் யாரும் ஆட்சேபிக்க முடியாது.

ஆயனர் தமது வேலையில் முழுக் கவனத்தையும் செலுத்திக் கொண்டிருந்தபடியால், வீட்டின் வாசலில் இரட்டைக் குதிரை பூட்டிய ரதம் வந்து நின்ற சத்தம் அவர் காதில் விழவில்லை.

''தாத்தா!'' என்ற மழலைக் குரலைக் கேட்டதும் திரும்பிப் பார்த்தார். மாமல்ல நரசிம்ம சக்கரவர்த்தியும் அவருடன் இரு குழந்தைகளும் வாசற்படியைத் தாண்டி வந்து கொண்டிருந்தார்கள்.

மாமல்லரின் உருவமும் ஓரளவு மாறியிருந்தது. அவருடைய முகத்தில் யௌவனத்தின் தளதளப்புக்குப் பதிலாக முதிர்ச்சி பெற்ற கம்பீர தேஜஸ் குடிகொண்டிருந்தது. படபடப்புக்குப் பதிலாகத் தெளிந்த அறிவும் முரட்டுத்

## லக்மே லவெண்டர் டால்க்

# கொஞ்சி மணக்கும் ஃபிரெஞ்சு மயக்கம்...

# ஃபிரெஞ்சுக்காரரே நெஞ்சாரப் பாராட்டுவார்.




லக்மே லவெண்டர் டால்க்—பூத்து மலர்ந்த ஃபிரெஞ்சு லவெண்டர் பூக்களின் வைபோக மணம். இன்ப இரகசியங்கள் பேசும்... மோகனக் கணை வீசும், பூசிக் கொள்வீர் லக்மே லவெண்டர் டால்க். யாவரையும் மதிமயக்குவீர்!

Lakmé

# லக்மே

லவெண்டர் டால்க்

உங்கள் எழில் எங்கள் தொழில்

லக்மே

# புதிய அனுபவம், பேரானந்தம்



ADROIT/925

## செஞ்சுரி
## பருத்தித் துணிகள்



**செஞ்சுரி** -100% பருத்தித் துணிகள்

தி செஞ்சுரி ஸ்பின். அண்டு மானுபு.
கம். லிமிடெட், பம்பாய்-400 025

துணிச்சலுக்குப் பதிலாக வைர நெஞ்சத்தின் உறுதியும் அவருடைய கண்களிலே பிரகாசித்தன.

அவருடன் வந்த குழந்தைகளின் முகத் தோற்றத்திலிருந்து அவர்கள் அண்ணனும் தங்கையுமாக இருக்க வேண்டுமென்று ஊகிக்க முடிந்தது. அண்ணனுக்கு, வயது எட்டு இருக்கும். தங்கைக்கு ஆறு இருக்கும்.

மாமல்லருடைய சாயல் இருவர் முகத்திலும் காணப்பட்டது.

''தாத்தா!'' என்று கூவிக் கொண்டு இரு குழந்தைகளும் ஆயனரிடம் ஓடினார்கள். ஆயனர் அவர்களை, ''என் கண்மணிகளே! வாருங்கள்!'' என்று சொல்லி வரவேற்றார். அவர்களைத் தம் தோளின் மேல் சாய்த்துக்கொண்டு கொஞ்சிச் சீராட்டினார். அவருடைய கண்களில் கண்ணீர் துளித்தது. அது குழந்தைகளைக் கண்டதனால் ஏற்பட்ட ஆனந்தக் கண்ணீரா, அல்லது நடந்திருக்கக் கூடியதையும் நடக்காமற் போனதையும் நினைத்துக் கொண்டதனால் ஏற்பட்ட அநுதாபக் கண்ணீரா என்று யாரால் சொல்ல முடியும்?

குழந்தைகள் சற்று நேரம் ஆயனருடன் விளையாடிக் கொண்டிருந்தபிறகு மாமல்ல சக்கரவர்த்தி அவர்களைப் பார்த்து, ''குந்தவி! மகேந்திரா! இரண்டு பேரும் வெளியே ஓடிப்போய்ச் சிறிது நேரம் விளையாடிக்கொண்டிருங்கள். நான் தாத்தாவுடன் கொஞ்சம் பேசிவிட்டு வருகிறேன்!'' என்று சொல்லிக் கொண்டே குழந்தைகளைக் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போய் வெளியில் விட்டார். ''கண்ணா! குழந்தைகளைப் பார்த்துக் கொள்!'' என்று சாரதியைப் பார்த்துச் சொன்னார்.

அதோ குதிரைக் கடிவாளங்களைப் பிடித்துக் கொண்டு நிற்பவன் கண்ண பிரான்தான். அவன் முகத்தில் இப்போது கறுகறுவென்று மீசை வளர்ந்திருந்தது.

குழந்தைகளை வெளியில் விட்டுவிட்டு வீட்டுக்குள்ளே திரும்பி வந்த மாமல்லரைப் பார்த்து ஆயனர், ''பிரபு! தாங்கள் எனக்கு இட்ட கட்டளையை நிறைவேற்றி விட்டேன். நூற்றெட்டாவது நடனச் சிலை இன்றோடு வேலை முடிகிறது!'' என்றார்.

சிவகாமியின் பிரிவினால் ஆயனரின் அறிவு நாளுக்கு நாள் சிதறிப்போய் வருவதைக் கண்ட நரசிம்ம வர்ம சக்கரவர்த்தி அவரை நூற்றெட்டு நடனத் தோற்றச் சிலைகளையும் பூர்த்தி செய்யும்படி கட்டளையிட்டிருந்தார். ஆயனர் வேலை செய்யத் தொடங்கிய நாளிலிருந்து அவருடைய அறிவு பாதுகாக்கப்பட்டு வந்தது.

''ஆயனரே! என்னுடைய ஆயத்தங்களும் முடிந்து விட்டன. விஜய தசமியன்று யுத்தத்துக்குப் புறப்படுகிறோம். காலையில் ஆயுத பூஜை நடத்திவிட்டு மாலையில் வாதாபி யாத்திரை தொடங்குகிறோம்!'' என்றார் மாமல்லர்.

''ஐயா! நானும் கேள்விப்பட்டேன். திருக்கழுக்குன்றம் மலைச்சாரலில் வந்து சேர்ந்திருக்கும் மாபெரும் சைனியத்தைப் பற்றிக் குண்டோதரன் கூறினான். கண்ணுக்கெட்டிய தூரம் யானைப் படையும், குதிரைப் படையும், காலாட் படையும் ஒரே சேனா



சமுத்திரமாய் இருக்கிறதாமே? இன்னமும் வீரர்கள் வந்து சேர்ந்துகொண்டிருக்கிறார்களாமே? வாளும் வேலும் ஈட்டியும் மலை மலையாகக் குவிந்து கிடக்கின்றனவாமே? குண்டோதரன் வந்து சொன்னதைக் கேட்டதும் எனக்கே திருக்கழுக்குன்றம் போய்ப் பார்க்க வேண்டும் என்று தோன்றியது.''

''ஆயனரே! திருக்கழுக்குன்றத்தில் இறங்கியிருக்கும் படைகள் நமது சைனியத்தில் மூன்றில் ஒரு பங்குதான். வடக்கே பொன்முகலி நதிக் கரையில் ஒரு பெரிய சைனியம் நம் சேனாதிபதி பரஞ்சோதியின் தலைமையில் காத்திருக்கிறது. தெற்கே யிருந்து பாண்டியனுடைய சைனியம் விரைந்து வந்து கொண்டிருக்கிறது. வராக நதிக்கு அருகில் வந்து விட்டதாக இன்றுதான் செய்தி கிடைத்தது.''



''பிரபு! என்னை மன்னிக்க வேண்டும். தாங்கள் காலம் கடத்திக் கொண்டிருப்பதாக எண்ணி நொந்துகொண்டிருந்தேன். எப்பேர்ப்பட்ட பகீரதப் பிரயத்தனம் செய்திருக்கிறீர்கள் என்று இப்போதுதான் தெரிகிறது....''

''பகீரதப் பிரயத்தனம் என்று சொன்னீர், ஆயனரே!''

''ஆம், ஐயா!''

''ஒரு சம்பவம் ஞாபகம் இருக்கிறதா? மகேந்திர பல்லவரும் நானும் நீங்களும் கடல் மல்லைத் துறைமுகத்தில் பாறைகளைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தோம். திடீரென்று மழை பிடித்துக் கொண்டது. ஒரு பாறை இரண்டாகப் பிளந்தது போல் நடுவில் பள்ளமாயிருந்தது. பாறையில் பெய்த மழைத் தண்ணீர் அந்தப் பள்ளத்தின் வழியே தடதடவென்று கொட்டியது. 'ஆகாச கங்கை விழுகிறது!' என்று நான் சொன்னேன். உடனே, மகேந்திர பல்லவர், 'சிற்பத்துக்கு நல்ல விஷயம்; இங்கே பகீரதன் தவத்தைச் சித்திரிக்கலாம்' என்றார். நீங்களும் அதை ஒப்புக்கொண்டு சிற்பிகளை அழைத்து வேலை தொடங்கும்படி சொன்னீர்கள். அப்போது நான் தந்தையிடம் பகீரதன் கதை சொல்லும்படி கேட்டுக்கொண்டேன்.

''பகீரதன் கதையை அன்று மகேந்திர பல்லவரிடம் கேட்டபோது எனக்கு ஒரே வியப்பாயிருந்தது. பகீரதனுடைய தவத்துக்கு என்னென்ன இடையூறுகள் நேர்ந்தன? அவ்வளவையும் சமாளித்து அவன் எடுத்த காரியத்தைச் சாதித்ததைக் குறித்துப் பெரிதும் ஆச்சரியப்பட்டேன். இளம் பிள்ளைப் பிராயத்தில் அப்பாவிடம் கேட்ட அந்தக் கதை இப்போது எனக்கு வெகு உபயோகமாயிருந்தது. ஆயனரே! வாதாபியிலிருந்து நான் உங்கள் குமாரியை அழைத்து வராமல் திரும்பி வந்தபோது, மூன்று வருஷத்துக்குள்ளே படை திரட்டிக் கொண்டு வாதாபிக்குப் போகலாம் என்று எண்ணியிருந்தேன். வரும் வழியெல்லாம் அவ்வாறுதான் நானும் பரஞ்சோதியும் திட்டம் போட்டுக் கொண்டு வந்தோம். மூன்று வருஷத்தில் நடத்த எண்ணிய காரியத்துக்கு ஒன்பது வருஷம் ஆகிவிட்டது.''

''பல்லவேந்திரா! ஒன்பது வருஷம் ஆயிற்று என்றா சொன்னீர்கள்? ஒன்பது யுகம் ஆனதாக எனக்குத் தோன்றுகிறது.''

''எனக்கும் அப்படித்தான் ஆயனரே! சிவகாமியைப் பார்த்துப் பல யுகம் ஆகிவிட்ட மாதிரிதான் தோன்றுகிறது. ஆனாலும் நான் என்ன செய்ய முடியும்? இரண்டு வருஷம் நாட்டில் மழை இல்லாமல் பஞ்சமாகப் போய்விட்டது. ஒரு வருஷம் பெரு மழையினால் சேதங்கள் நேர்ந்தன. இலங்கை இளவரசன் மானவன்மனுக்கு ஒத்தாசை செய்ய வேண்டி வந்தது. பாண்டியனுக்கும் சேரனுக்கும் மூண்ட சண்டையில் தலையிட்டுச் சமாதானம் செய்விக்க வேண்டியிருந்தது. இத்தகைய காரணங்களினால் மனச் சோர்வு ஏற்பட்டபோதெல்லாம் அடிக்கடி துறைமுகத்துக்குச் சென்று பகீரதனுடைய தவச் சிற்பத்தைப் பார்த்தேன். மீண்டும் ஊக்கமும் தைரியமும் அடைந்தேன். கடைசியில் பகீரதன் முயற்சி பலிதமடைந்ததுபோல் என்னுடைய பிரயத்தனமும் பூர்த்தியடைந்து விட்டது. அடுத்த வாரத்தில் போருக்குப் புறப்படப் போகிறேன்.''

''பிரபு! இது என்ன? புறப்படப் போகிறேன்' என்று சொல்கிறீர்கள்?'' என்று கேட்டார் ஆயனர்.

''வேறு என்ன சொல்ல வேண்டும் ஆயனரே?''

'' 'புறப்படப் போகிறோம்' என்று சொல்ல வேண்டும். பல்லவேந்திரா! இன்னும் எத்தனை காலம் நான் உயிரோடிருப்பேனோ, தெரியாது. சிவகாமியை ஒரு தடவை கண்ணாலே பார்த்து விட்டாவது கண்ணை மூடுகிறேன்.''

மாமல்லர் தம்முடைய கண்களில் துளித்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, ''ஐயா! உம்முடைய மகளுக்காகவே நீர் உயிர் வாழ்ந்தே ஆக வேண்டும். சாவைப் பற்றி நினைக்கவே வேண்டாம். நீங்கள் வந்தே தீர வேண்டுமென்றால் அழைத்துப் போகிறேன். விஜயதசமியன்று புறப்பட ஆயத்தமாயிருங்கள்!'' என்றார்.

(தொடரும்)




தாயும் மகளும்

# பரம்பரைச் சொத்து பரிமளித்தது!

**ப**க்காத் திருடன் ஒருவனுக்குப் பிறந்த குழந்தையின் கை மூடியே இருந்ததாம். ரொம்பப் பிரயாசைப்பட்டு விரல்களைப் பிரித்துப் பார்த்தால், பிரசவம் பார்த்த லேடி டாக்டரின் மோதிரம் காணப்பட்டதாம்! பரம்பரைக் குணம் ஆளை விடாது; பிறவியிலேயே பற்றிக் கொள்ளும் என்பதற்கு இப்படி ஒரு வேடிக்கைக் கதை கூறுவதுண்டு.

கதையின் தத்துவச் சிறப்பை, பாலசுப்பிரமணிய சங்கீத சபா ஆதரவில் ஸ்ரீமதி பிரும்மானந்தமும் அவரது குமாரி அனுராதாவும் சேர்ந்து வயலின் வாசித்தபோது உணர முடிந்தது. ஸ்ரீனிவாச சாஸ்திரி அரங்கம். சிறிய கூடம், அதனை நிறைந்த ரசிகர்கள் கூட்டம், ஒத்துழைத்த மைக். இந்த அளவுக்குக் கச்சிதமாக அமைந்த சூழலில் வயலின் நாதம் வேறு, நாம் வேறு என்ற உணர்வையே இழந்து சங்கீதத்தில் ஐக்கியமானோம். இலகுவாக இதயத்தில் பாய்ந்து இதமளித்த இனிய சங்கீதம்.

ஸ்ரீமதி பிரும்மானந்தத்துக்குச் சங்கீதம் பரம்பரைச் சொத்து. தியாகையர் வம்சத்தில் தோன்றியவர், லால்குடி ஸ்ரீ ஜயராமனின் சகோதரி. அவரிடம் பயின்று, பிறகு அவருடன் சேர்ந்து பல அரங்கங்களில் கச்சேரி செய்தவர். வாசிப்பில் லால்குடி பாணி நிரம்ப இருந்தாலும் தமக்கெனத் தனி வழி வகுத்துக் கொள்ள அவர் முயல்வதையும் சங்கராபரணத்தில் காண முடிந்தது.

நாட்டக் குறிஞ்சியில் ஆரம்பித்துக் குந்தலவராளி வரை அன்று ஸ்ரீமதி கூடை கூடையாக ராக மலர்களைச் சொரிந்து தள்ளினார் என்று கூறலாம். அத்தனை ராகங்களை வாசித்தாலும் ஒவ்வொன்றும் தனித்தனியே மனத்தில் நிலைக்கிற மாதிரி நிதானமாகவும் இலகுவாகவும் அழகாகவும் எடுப்பாகவும் வாசித்தார்.

ஸ்ரீ ரஞ்சனியில் அனுராதாவுடன் செய்த சுவரப் பிரஸ்தாரத்தின் முடிவில் ரசிகர்கள் ஒவ்வொருவருமே ஒரு பெருமூச்சுவிட்டிருப்பார்கள். அந்த அளவுக்கு மன நிறைவு ஏற்பட்டது.

பத்து வயதுச் சிறுமி மூன்று மணி நேரம் ஆடாமல் அசையாமல் ஒரே இடத்தில் உட்கார்ந்திருப்பதே பெரிய காரியம். அதோடு வயலின் வாசிக்கவும் செய்து மனம் கவரும்படி அந்த வாத்தியத்தைக் கையாளவும் அறிந்திருந்தால் வாழ்த்தாமல் இருக்க முடியுமா? மனப்பூர்வமாய்ப் பாராட்டிவிட வேண்டியதுதான். ஆனால் அரங்கேற்றம்தான் என்பதைத் தாயும் மகளும் மறக்கவேயில்லை. அளவோடு மகளை வாசிக்க அனுமதித்துவிட்டுக் கச்சேரியை நடத்திச் செல்லும் பெரும் பொறுப்பைத் தாமே ஏற்றார் ஸ்ரீமதி. இன்னும் கொஞ்ச காலத்துக்கு இந்த முறையைக் கடைப் பிடிக்க வேண்டியதுதான். ராக பாவத்திலோ கீர்த்தனையின் அர்த்தபாவத்திலோ தன்னைக் கரைந்துக் கொள்ளச் சிறுமிக்கு எப்படி முடியும்?

ஸ்ரீ டி.கே. மூர்த்தியின் மிருதங்க வாசிப்பின் தன்மையை உணர்த்துவதற்காகவே அன்று 'மொகலேகா' கீர்த்தனையை ஸ்ரீமதி பிரும்மானந்தம் வாசித்தாரோ என்று எண்ணும் அளவில் மிருதங்க தாளம் வயலின் நாதத்துக்குச் சொகுசாக ஜதை சேர்ந்து ரசிகர்களை மயங்கச் செய்தது! - வி. ரா.

குமாரி காயத்ரியின் 500வது வீணைக் கச்சேரியை ஏற்பாடு செய்த பாலசுப்பிரமணிய சங்கீத சபா சார்பில் நீதிபதி கோகுல கிருஷ்ணன் கலைஞருக்குத் தம்புராப் பரிசு வழங்குகிறார்.



பெண்மைக்குரிய மென்மையுடனும்
நறு மணத்துடனும் திகழுங்கள்

புதிய பெடல் ஷவர்—
அன்றலர்ந்த வசந்த மலரின்
அருமையான நறு மணமும்,
மென்மையும் கூடிய டால்க்.




புதிய
பெடல் ஷவர் மட்டுமே
**இவ்வளவு**
**குறைவில்**
நறுமணங்கமழும்
மென்மையைத்
தருகிறது.

PST G.I. TM




நம் சிநேகிதர்களில் ஒருவரையோ அல்லது தெரிந்தவர்களில் ஒருவரையோ பற்றி பேசும் போது, ''அவனைப் பற்றியா கேட்கிறீர்கள்?'' என்று கேட்டு விட்டு அவனுடைய குணதி சயத்தைப் பற்றிச் சொல்வதுண்டு. அதே மாதிரி கிண்டல் நிறைந்த கூற்றுக்களைத் தொகுத்து "2000 More Insults" என்று ஒரு புத்தகத்தை எழுதியிருக்கிறார் 'லூயிஸ். ஸேபியன்' என்பவர். சில துளிகள்:

○ அவனிடம் மூன்று மூக்குக்கண்ணாடிகள் உள்ளன. ஒன்று கிட்டப்பார்வைக்கு, இரண்டாவது தூரப் பார்வைக்கு; மூன்றாவது மற்ற இரண்டையும் தேடு வதற்கு!

○ அவனுக்குச் சிகரெட் லைட்டரை விட நெருப்புக் குச்சியை உபயோகிப்பதே பிடிக்கிறது. காரணம்— சிகரெட் லைட்டரால் பல்லைக் குத்த முடிவதில்லையாம்!

○ ''வீட்டில் எஜமானனாக இருப்பது எப்படி? என்ற புத்தகத்தை அவன் வாங்கி வந்து பல நாளாகியும் இன்னும் படித்து முடிக்கவில்லை. காரணம்—அவன் மனைவி அனுமதி கொடுக்க மறுத்து விட்டாள்!

○ அவன் உயரம் ஆறு அடி. அது திடீரென்று ஐந்தரை அடியாகக் குறைந்து விட்டது. காரணம்— அவன் சலூனுக்குப் போய் வந்ததுதான்!

○ அவனது மேலதிகாரி செய்வது எல்லாமே சரியான காரியமாகத்தான் இருக்கும்; முக்கியமாக அவர், தவறான காரியம் செய்யும்போது!

○ அந்தப் பணக்காரரின் நாய்க்குட்டி தொலைந்து போய் விட்டது. ஆனால் பேப்பரில் விளம்பரம் போட மாட்டேனென்கிறார். ஏனென்றால் அவருடைய நாய்க் குட்டிக்குப் படிக்கத் தெரியாதாம்!

○ அவன் கஷ்டத்தில் இருக்கும்போது நீங்கள் அவனுக்கு உதவி செய்தால் அவன் உங்களை மறக்கவே மாட்டான்.— முக்கியமாக மறுபடியும் கஷ்டம் வரும் போது!

○ கண்டதும் காதல் ஏற்படவில்லை அவள் மேல் அவனுக்கு. இரண்டாம் முறை கண்ட போதுதான் ஏற்பட்டது. காரணம்—முதன் முறை பார்க்கும்போது அவள் பணக்காரி என்று அவனுக்குத் தெரியாது!

○ அவனிடம் நீங்கள் கைமாற்றாகப் பணம் கொடுத்தால் ''சார், நான் என்றைக்கும் உங்களுக்குக் கடன் பட்டிருப்பேன்'' என்பான். கடைசி வரை அது உண்மையாகவே இருக்கும்!

○ அந்த வழுக்கைத் தலை மனிதருக்கு சலூன்காரன் மூன்று ரூபாய் சார்ஜ் செய்கிறார். கேட்டால் ''மூன்று ரூபாய் முடி வெட்டுவதற்கல்ல, அதைத் தேடுவதற்குத்தான்'' என்கிறார்!

தொகுப்பு: கே. வி. முரளி

# கட்சி மாறும் பட்சி!

கதை: குட்டி கிருஷ்ணன்

படம்: "ராஜு"

2



















கஷ்டமா, எனக்கா? நான்சென்ஸ்! என் வாழ்நாளை நான் மக்கள் பணிக்கு அர்ப்பணித்து விட்டேன்! மக்கள் என்னைக் கை விட மாட்டார்கள்!
மக்கள் பணியா அப்படின்னா?


அரசியல் வாதின்னு அர்த்தம். மக்கள் பணியே மகேசன் பணி என்ற நோக்கில் உத்தியோகத்தைக் கூட உதறித் தள்ளிய உத்தமர்! நாளை பத்திரிகைகளில் பார், பத்திப் பத்தியாக என் பெருமைகள் பளிச்சிடுவதை!


என் கோரிக்கை? நான் தூது வந்த விஷயம்?
மேற்கு ஆசிய அமைதிப் பணியிலும் வியட்நாம் போர் நிறுத்தத்திலும் கிஸ்ஸிஞ்சர் அடைந்த வெற்றிக்கு இணையானது, போ!


தோல்வியை ஒப்புக் கொண்டு கீதா திரும்பினாள். ஆனால் பட்சிக்கும் தோல்விதான். அவன் அனுப்பிய அறிக்கைகளை ஒரு பத்திரிகையும் லட்சியம் செய்யவில்லை.
இது என்ன அநியாயம்! பத்திரிகைகள் இப்படி நடந்துக்கிட்டா நான் எப்படி பிரபலமடையறது?... பணம் பண்றது? ஆ! ஐடியா!


ஹலோ கீதா! உன் அப்பா பிரிந்த கட்சிப் பிரமுகர்தானே. நான் பகுதிக் கட்சியிலேருந்து விலகி, பிரிந்த கட்சியில் சேருவதாக அவரிடம் சொல்லு. அங்கத்தினர் சந்தா ஐம்பது பைசா எனக்கு நஷ்டமானாலும் பரவாயில்லை!


ஞாயிற்றுக் கிழமை பொதுக்கூட்டம்...
பகுதிக் கட்சியில் நிலவும் லஞ்ச ஊழல் கெடியையும் அதிகார வெறியையும் சகிக்க முடியாமல் பிரிந்த கட்சிக்கு வந்து சேர்ந்திருக்கிறார் பண்பாளர் பட்சி. கட்சி மாறிய பட்சியை நெகிழ்ச்சியும் எழுச்சியும் கொண்டு மகிழ்ச்சியுடன் வரவேற்கிறோம்!

தொடரும்

அந்தப் பெண் கோவிலடிப் பக்கத்தில் எல்லோருக்குமே குட்டியாகத்தான் விளங்கினாள். இரண்டு ஆண்டுகள் போல் அவள் கண்ணெதிரே இருந்தும் அவளுடைய பெயரே யாருக்கும் தெரியாது. ''ஏ குட்டி, தா குட்டி, டீ குட்டி'' என்று இனிஷியல் போட்டுத்தான் அவளைக் கூப்பிட்டார்கள்.

அந்தச் சிறுமி அந்த இடத்துக்கு முதல் முதலில் வந்தபோது ஒன்பது வயது என்று அவள் தாயே சொல்லியிருக்கிறாள். அதுவும் அவளுக்கு நிச்சயமாகத் தெரியாது. அறுபத்து மூவர் உற்சவத்திலே தாயும் மகளும் பிரிந்தவர்கள்தான்.

ஒவ்வொரு கூட்டத்திலும் புகுந்து புகுந்து புறப்பட்டுச் சுற்றிச் சுற்றி அலைந்து, கால் சலித்துப் போய், அம்மாவைக் காணாமல் அழுகை வெளிவாங்கிப்போய் அந்தக் கோயில் கோபுர வாசலுக்கு அந்தி சந்தி நேரத்தில் வந்தவள்தான். அதிலிருந்து அந்த இடத்தை விட்டு அவள் போகவே இல்லை.

கோயிலுக்கு வருகிறவர்களுடைய மிதியடிகளை வாங்கி வைத்துக் கொண்டிருந்த கிழவி ஒருத்தி அவளைப் பார்த்து ஆறுதல் சொல்லி, பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டாள். மிதியடிகளை விட்டுச் சென்றவர்கள் திரும்பி வந்து ஜோடிக்கு ஐந்து காசு வீதம் கொடுத்து விட்டுப் போனார்கள். கோவில் வாசலில் கிழவிக்கு எப்போதுமே இன்னும் இரண்டு சிறுவர்கள் போட்டி உண்டு. ஆனால் இன்று திடீரென்று கிழவியின் கை ஓங்கி விட்டது. இரண்டு வயிறுகள் பிழைக்க வேண்டுமே என்று வந்தவர்கள் நினைத்ததுதான் காரணம் என்பது கிழவிக்குப் புரிந்து விட்டது. சிறுவர்கள் இருவரும் செருப்பை விட வருகிறவர்களுடைய கால்களையே பிடித்துக்கொண்டு



# ஒரு வெள்ளிக்கிழமையில்

விடுவார்கள். இன்று அவர்கள் போட்டியெல்லாம் பலிக்கவில்லை. அதனால் கிழவி பேரம் பேசி ஐந்து காசுக்கு இரண்டு பலாச்சுளை வாங்கி இந்த இரவல் பேத்திக்குத் தின்னக் கொடுத்தாள். ஆனால் அந்தக் குட்டிக்கு அழுது அழுது பசியே மந்தித்துப் போய் விட்டது. இரவு வெகு நேரம் வரையில் அவள் கிழவிக்குப் பக்கத்திலேயே ஆடி விழுந்து கொண்டு உட்கார்ந்திருந்தாள். விவரம் தெரிந்த பின்னர் தொழுப்பேடு பக்கத்திலிருந்த கிராமத்தை விட்டு, பிழைப்பைத் தேடி வெளியேறிய நாளிலிருந்து அவள் தாயை விட்டுப் பிரிந்ததில்லை. ஊர் ஊராகச் சென்று, கூலி வேலை செய்து அவர்கள் வயிற்றைக் கழுவிக் கொண்டு வந்தார்கள். வேலை கிடைக்காத நாட்களில் அவர்கள் ஒட்டப் பட்டினியும் கிடந்தார்கள். அதனால் குட்டிக்குப் பசி பட்டினி ஒன்றும் புதிதில்லை. தாயை விட்டுப் பிரிந்ததுதான் பெரிய கிலி. அவள் தன்னைத் தேடிக கொண்டு நலிந்த உடம்பும் தளர்ந்த நடையுமாய் எப்படியாவது வருவாள் என்று பார்த்துக் கொண்டே யிருந்தாள். கடைசியில் அழுது தேம்பிய அசதியில், கிழவிக்குப் பின்னாலேயே சோர்ந்துபோய், சுருண்டு படுத்து விட்டாள். விடிந்த பிறகுதான் அவளுக்கு விழிப்பு வந்தது. சொரணையின்றி அப்படித் தூங்கிப் போனாள்.

அன்றிலிருந்து அவளுக்கு அந்தக் கோயில் வாசலே நிரந்தர தங்குமிடமாகி விட்டது. அந்தக் கிழவியோடு ஒண்டிக்கொண்டு விடலாம் என்று ஒட்டி ஒட்டிப் பார்த்தாள். கிழவி அவளைச் சேர்த்துக் கொண்டு, கிடைப்பதைப் பங்கிட்டுக் கொள்ளத் தயாராயில்லை. கிழவியோடு போட்டியிட்ட சிறுவர்களில் பெரியவன் மெதுவாக அவள் நிலையைப் புரிந்துகொண்டான். அவளுடைய தாயைத் தேடிப் பார்க்கும்படி சொல்லிக் கொண்டேயிருந்தான்.

ஒரு நாள் அவள் அவனிடம், ''அது செத்துப் போச்சு!'' என்று அலட்சியமாகச் சொல்லிவிட்டாள்.

''எப்படித் தெரிஞ்சுது?''

''இல்லாட்டிப் போனா அது என்னைத் தேடி வராமல் போவுமா?''

''அப்ப என்ன செய்வே நீ?''

'' இப்பிடியே இருந்திட வேண்டியதுதான்!''

இந்த முடிவுக்கு வந்த பிறகு கோயில் வாசலை ஒட்டியிருந்த கடைக்காரர்களைப் பழக்கம் செய்து கொண்டு அவர்களுக்கு வலியப் போய் உதவினாள். அவர்கள் சொல்லாமலேயே வேண்டியபோதெல்லாம் பக்கெட்டிலே தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள். வாசலில் குப்பை சேர்ந்தால் பெருக்கித் தள்ளினாள். கடைக்காரர் கடையைச் சற்றுப் பார்த்துக் கொள்ளச் சொன்னால் பொறுப்பாகப் பார்த்துக் கொண்டாள்.

பொடிக்கடை முதலியார் பொல்லாத முசுடு; ஆனால் பெரிய மனுஷன்.

''ஏ குட்டி, நம்ம வூட்லே சாப்பாடு எடுத்து வைச்சிருப்பாங்க. ஓடிப் போய்க் கொண்டுக்கினு வா!''

அவர் வீடு இருக்குமிடம் அவளுக்குத் தெரியாது. அதை அவரிடம் சொல்லப் பயம். பக்கத்துக் கடைப் பையனிடம் கேட்டு எப்படியோ வீட்டைத் தேடிக் கண்டு பிடித்து, சாப்பாட்டு அடுக்கை வாங்கிக் கொண்டு வந்து விட்டாள். வேக வேகமாகத் தான் வந்தாள்.

''இதுக்கா இத்தினி நேரம்?'' என்று உறுமினார் முதலியார்.

குட்டி பதில் சொல்லவில்லை. பச்சரிசிப் பற்களைக் காட்டி மெல்லச் சிரித்தாள். மூச்சு இரைத்தது.

பசியாறிய பிறகுதான் முதலியாருக்குச் சாந்தம் பிறந்தது. வீட்டை அடையாளம் சொல்லாமல் போகச் சொன்னது இப்போதுதான் ஞாபகத்துக்கு வந்தது. இந்தக் காலத்துப் பிள்ளைகள் மாதிரி போகாததற்குச் சாக்குச் சொல்லாமல் சொன்னதைச் செய்து முடித்ததற்குச் சந்தோஷப்பட்டார்.

''ஏ குட்டி, என்ன வயசாவுது ஒனக்கு?''

அவள் அதே சிரிப்புடன் இரண்டு கைகளையும் விரித்துத் தெரியாது என்றாள்.

''நீ என்ன சாதிப் புள்ளே?''

சாதி என்றால்? மறுபடியும் 'தெரியாது' என்று சொல்லப் போனவள் உடனே தெரியும் என்பதுபோல் ''பொண்ணு சாதிதான்!'' என்றாள்.

முதலியார் முரடு நெகிழ்ந்து சிரித்துவிட்டு, ''சரி சரி, டப்பாவுலே சோறு குளம்பு இருக்கு. அத்தெ வாயிலே உருட்டிப் போட்டுக்கினு சோத்து டப்பாவைக் கொண்டு ஊட்லே குடுத்துடு!'' என்றார் கனமிடுக்காக. மறுபடியும் ''தா, குட்டி!'' என்று போனவளைக் கூப்பிட்டு, ''வரச்சொல்ல ஊட்லே எண்ணெய் இருந்தாக் கேட்டு வாங்கித் தலையிலே வெச்சுக்கினு வரணும் தெரியுதா?'' என்று உத்தரவும் போட்டார்.

''சரி'' என்று தலையை ஆட்டினாள் குட்டி. அன்று முதல் முதலியார் அழைத்ததே பெயராகப் போய் அவள் அங்குள்ள எல்லாருக்குமே குட்டியாகி விட்டாள். பூக்கடை, தேங்காய் பழக் கடை, பொம்மை சாமான் கடை, வெற்றிலை பாக்குக் கடை, ரிப்பன் வளைக் கடைகளில் ஒருவர் மாற்றி ஒருவர் அவளுக்குச் சோறு இல்லாவிட்டால் 'நாஸ்தா' பலகாரம் கொடுத்து விடுவார்கள். ராத்திரிக்குக் கிடைக்காது என்பதால் தின்பதைத் தின்றுவிட்டு, மிச்சத்தை அப்படிச் சுருட்டிப் பொடிக் கடைக்கும் பூக்கடைக்கும் இடையே இருந்த மேடைப் பிறையில் பதுக்கி வைப்பாள். ராக்காலங்களில் புருக் குஞ்சு போல் படுக்கையும் அவளுக்கு அங்கேதான். ஆக மொத்தம் இந்த இரண்டு ஆண்டுகளாகக்



# ஒரு கன்னிப்பெண் - ஆர்வி.

காலே மாலே எந்த நேரத்திலும் அவனுக்கு அங்கே வேலே சரியாக இருந்தது.

மறுநாள் உச்சி வெயில் நேரத்தில் சிறுவர்களில் பெரியவன் மாணிக்கம் அவளைத் தேடிக் கோயிலடிப் பக்கமெல்லாம் சுற்றி அலைந்தான். முருகன் சந்நிதி, அம்மன் சந்நிதி, பிராகாரம் எங்குமே அவள் தென்படவில்லை. எந்தக் கடை நிழலிலும் அவள் நிற்கவில்லை. இந்த நேரத்தில் அவள் எங்கே இருப்பாள் என்று தெரியாதபடி தற்செயலாக அவன் குளக்கரை ஓரமாக வந்தான். படிக்கட்டுகளுக்கு மேலே ஒரு மூலையில் சுற்றுச் சுவருக்கு அருகில் அவளுடைய தலை தெரிந்தது. அவள் இவனைப் பார்க்கவில்லை. மாணிக்கம் படிக்கட்டுப் பாதை வழியாக அவளைப் பார்க்க வந்தான். ஈரப் பாவாடையைப் பிழிந்து கட்டிக் கொண்டு, அவள் கிழிந்த மேல் சட்டையைப் படியின் மேல் காயப் போட்டு விட்டு, இரு கைகளையும் மார்போடு குறுக்கே வைத்துக் கொண்டு நின்றாள்.

குட்டி அவனைப் பார்த்ததும் புன்னகை செய்தாள்.

''இங்கேக்கிறியா? உன்னியெத்தான் தேடிக்கினு வந்தேன்.''

''குளிச்சேன். சட்டை காயுது. இரு; தோ வந்துப்புடறேன்.''

மாணிக்கம் அவள் வரும்வரையில் குளக்கரைத் தென்னை மரத்து நிழலில் கையில் ஒரு பையோடு நின்றான்.

''நெதம் குளிப்பியா?''

''ஊம்; என்னிக்கினுத்தான். துணி நனைச்சாத்தான்.''

''அதானே கேட்டேன். இன்னிக்கு ஒண்ணு செய்யிறியா? கோயிலடிக்கு வந்தின்னு நம்ம சைடுக்கு வந்திடு.''

குட்டியின் இமைகள் வேகமாக இமைத்தன.

''ஏன்?''

''அப்பத்தான் அந்தக் கெய்விக்குப் புத்தி வரும். நேத்து அல்லாத் துட்டையும் கெய்வி புடுங்கிக்கினுனே — கஸ்மாலம் புட்சது!''

குட்டி அவனையே சிறிது பார்த்தாள். பிறகு, ''சர்தான் போ. ஆவட்டும்!'' என்று ஒப்புக்கொண்டாள்.

அன்று வெள்ளிக்கிழமை. சாயங்காலம் நல்ல கூட்டம் வரும். குட்டி மாணிக்கத்துக்கு வாக்குக் கொடுத்தபடி எதிர்ப் பக்கம் போய் உட்கார்ந்திருப்பதைக் கண்டு கிழவி திகைத்துப் போனாள். அதைக் கண்டு குட்டியும் மாணிக்கமும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள். அவர்களோடு சேர்ந்து உட்காரக் குட்டிக்குக் கூச்சமாக இருந்தது. தம்பி ரத்தினத்துக்குத் தன்னைக் கண்டால் பிடிக்காது என்றுதான் சற்று விலகினாற்போல் உட்கார்ந்திருந்தாள். அவனுடைய தோற்றத்தில் ஒரு மாறுதல் இருந்ததையும் மாணிக்கமும் அவளும் பார்த்துக் கொள்வதையும் கண்ட ரத்தினத்துக்கு உள்ளூற எரிச்சலாக இருந்தது.

சாப்பாடு எடுத்து வரப் போனபோது குட்டி முதலியார் வீட்டில் எண்ணெய் வாங்கித் தடவிக் கொண்டிருந்தாள். கோயிலில் அம்மன் சந்நிதியில் அன்றைக்கு அவளுக்கு வெற்றிலே பாக்குப் பழம், கண்ணாடி, சீப்பு, குங்குமச் சிமிழ் கால் ரூபாய் காசு எல்லாம் வரும்படியாக வந்திருந்தன. மாவிளக்கு மாவும் ஓர் உருண்டை கிடைத்தது. அந்தச் சீப்பால் அவள் கோயிலடிக்கு வரும் போது தலையை வாரி, கறுப்பு நூல் போட்டுக் கட்டி யிருந்தாள். வளைக் கடைக்குப் போய்க் கையிலிருந்த கால் ரூபாய்க்கு வளை கேட்டபோது நாமக்காரச் செட்டியார் அவளைப் பார்த்துச் சிரித்தார்.

''கா ரூவாய்க்கு ஒத்த வளையல்தான் வரும். போடவா?'' என்று கேட்டுவிட்டு, ''இருந்தாலும் கைக்கு ரெண்டு கண்ணாடி வளையல் போட்டுக்கினு போ! காசு வாணும்'' என்று சொல்லி வளையைப் போட்டு அனுப்பினார்.

அது என்ன மாயமோ, கோயிலுக்கு வந்தவர்களில் பத்துப் பேரில் ஏழு எட்டுப் பேர் கால் ஜோடுகளைக் குட்டியிடம்தான் விட்டுப் போனார்கள். மீதிதான் அந்தச் சிறுவர்களுக்கு வந்தது. ரத்தினத்துக்கு அது வேறு எரிச்சல். பார்க்கப் போனால் அவனுக்கும் குட்டி வயதுதான் இருக்கும்.

தங்கள் வரும்படி குறைந்து போவதைக் கண்டு ரத்தினம் ஆத்திரத்தில் பொங்கினான். குட்டியை எரித்து விடுவதுபோல் பார்த்தான். அவன் துள்ளி எழுந்தான்.

''தே, எழுந்திரிம்மே!'' என்று சீறி விழுந்தான் ரத்தினம்.

''ஏன்?''

''அந்தக் கேய்வி யெல்லாம் கேக்காதே. எயுந்திரின்னு ஏந்திரிச்சிடு. ஆமா...''

மாணிக்கம் அவனைத் தடுத்தும் கேட்கவில்லை. குட்டி அதைத் துளியும் லட்சியமே செய்யாமல் காரிலிருந்து இறங்கிய ஜோடியைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''ஏ குட்டி! வண்டியைச் சித்தே கவனிச்சுக்கிறியா?''

''ஆவட்டும்மா!''

''நாங்க கவனிச்சிக்கிறோம். நீங்க போயிட்டு வாங்கம்மா!'' என்று வலுவில் போய்ச் சொன்னான் ரத்தினம். ''அது அறுமத்துக் குட்டிம்மா. நாங்கதான் இங்கே எப்பவும் இருக்கிறவங்க!'' என்று மறுபடியும் சொன்னான்.

''டேய், போடா சரிதான். அதுவே பாத்துக்கட்டும்டா'' என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டார் ஜோடியாக வந்தவர்.

குட்டி இப்போதும் மாணிக்கத்தைப் பார்த்துச் சிரித்தாள். ரத்தினத்துக்குப் பற்றிக் கொண்டு வந்தது.

''இன்னாடி கய்தே சிரிக்கிறே.... பெரிய இஸ்டைலா? எயுந்திருக்கப் போறியா, இல்லியாடி?'' — வெறி பிடித்தவன் போல் அவள் மீது பாய்ந்து அவளைக் கீழே புரட்டித் தள்ளினான்.

அந்த வேகத்தில் அவள் கையில் அணிந்திருந்த கண்ணாடி வளையல்கள் நாலும் நொறுங்கிப் போயின. குட்டி பெண் புலியாக மாறி, தன் கூரிய நகம் கொண்டு கை பதியக் கிள்ளினாள். முகத்தைக் கீறினாள். மாணிக்கம், ''டேய், டேய்'' என்று குறுக்கே பாய்ந்து அவர்களை விலக்கி விடப் போக, குட்டியின் எண்ணெய்ப் பிசுக்குச் சட்டையும், மக்கல் பாவாடையும் நாரும் தோலுமாகக் கிழிந்ததுதான் கண்ட

பலன். ரத்தினத்தின் கையில் அவளுடைய சட்டையின் முதுகுப் பகுதியே வாலாக வந்து விட்டது. அப்படியும் விடாமல், மாணிக் கத்தையும் மீறிக்கொண்டு அவள் முகத்தைக் காட்டிக் குத்தப் போனுன்.

அடுத்த நொடியே அவன் பிடரியில் பேயறையாக ஓர் அடி விழுந்தது. ஓங்கிக் கொண்டு போன கை ஒரு முரட்டுக் கைக்குள் வாகாகச் சிக்கிக் கொண்டது. அப்படி இப் படி அசைய முடியாமல் அந்தப் பிடி இறுகவே அவன் அலறினுன். பொடிக் கடை முதலியார் பிடி இரும்புப் பிடியாக அவனை வெட்டி இழுத்தது.

''இல்லேப்பா, இல்லேப்பா'' என்று துடித் தான் ரத்தினம்.

''இன்னுடா இல்லே?'' என்று முதலியார் உறுமினுர்.

''நான் இல்லேப்பா, அதாம்ப்பா, உட்டு டுப்பா!''

''அது இன்னுடா செஞ்சிது ஒன்னே? உம்?''

''அடிக்காதேப்பா, சொல்றேம்பா...எங்க சைடுலே வந்து குந்திக்குனு அதாம்பா வம்பு வெலிச்சுது!''

''எதுடா ஒங்க சைடு? ஒங்கப்பன் வாங்கிப் போட்டுக்கிருனு? — எது அது, ஒங்க சைடு?'' கையை ஒரு சிறு முறுக்கல்.

வீல் என்று ஓர் அலறல்.

''நானும் பாத்துக்கினுதான்கிறேன். அதுஞ் சட்டையைப் புடிச்சு வெலிச்சு, பாவா டையைப் புடிச்சு இஸ்து கிளிச்சி...ம்ம்...''

''நான் கியிக்கல்லேப்பா!''

''பேசினே, போட்டுப்புடுவேன் போட்டு. வாடா இப்பிடி. புள்ளேயாரைப் பாத்துப் போடுடா தோப்புக்கரணம். போறுக்கி ராஸ்கோல். காதெப் புட்சிக்கடா. எண் ணிக்கினே போடணும். பெலக்கக் கேக்கருப் பலே சொல்லு. வாபம், ரெண்டு, மூணு... இனிமே அதும் வம்புக்குப் போக மாட் டேனிட்டே போடு!''

முதலியார் முப்பது எண்ணும் வரையில் அங்கேயே நின்ருர். அதற்கு மேல் கடையைப் பார்க்கப் போனுர்.

ஜோடுகளுக்கு முன்னுல் கிழிசல் தெரியாத படி தன்னை ஒடுக்கிக்கொண்டு உட்கார்ந் திருந்தாள் குட்டி. என்ன செய்தாலும் அங்கங்கே கிழிசல் தெரிந்து கொண்டுதான் இருந்தது. அவளுக்கு அங்கே மேலும் உட் கார்ந்திருக்கப் பிடிக்கவில்லை. இருந்தாலும் சிலர் வற்புறுத்தி அவளிடம் செருப்பை விட்டு விட்டுத்தான் போனுர்கள். மாணிக்கமும் கிழவியும் முந்தியே போய்விட்டதால் அவளை விட்டால் அங்கே வேறு யாரும் இல்லை. அதனுல் அவள் எல்லோரும் வந்து போகும் வரையில் இருந்துதான் தீர வேண்டியிருந்தது. செருப்புக்களை வாங்கி வைத்துக் கொள்ளும் போதும் திருப்பிக் கொடுக்கும்போதும் அவள் தன் கைகளைப் பார்த்துக் கொண்டாள். வளை நொறுங்கி ஏற்பட்ட கீறல்கள் கண்ணில் பட் டன. தலையெல்லாம் பழையபடி கலைந்து தெரு விளக்கின் நிழலில் பரட்டையாகத் தெரிந்தது. தரையில் புரண்ட அழுக்கு உடம்பில் திட்டுத் திட்டாகத் தெரிந்தது. அதற்கெல்லாம் அவள் சிறிதும் கவலைப்பட



**ஷேக் அப்துல்லா சொன்ன கதை!**

பம்பாய் தெருவில் சென்ற ஒருவரை ஓர் ஆசாமி நிறுத்தி, ''உங்களுக்குப் பணம்சம்பாதிக் கும் எந்திரம்வேண்டுமா? விலை 25 பைசா தான்'' என்ருன்.

''அந்த மாதிரி மெஷின் எதுவும் கிடையாதே?''

''இருக்கிறது! என்று சொல்லி விட்டு ஒரு காந்திக் குல்லாயை எடுத்துக் கொடுத்தான் அந்த ஆசாமி!''

ஹிம்மத் - பாலி

வில்லை. மத்தியானத்திலிருந்து கையிலிருந்த கால் ரூபாயும் அப்புறம் வசூலான பதினைந்து இருபது காசும் சண்டையின்போது மண் ணிலே விழுந்து விட்டன. அதற்காகவும் அவள் வருத்தப்படவில்லை.

ஆனுல் இருந்த ஒரு சட்டையும் பாவாடை யும் கிழிந்து போய்விட்ட துக்கம் ஒன்றுதான் தொண்டையை வந்து அடைத்தது. உட் காரும்போதுகூட ஓரளவு கிழிசலை மறைத்துக் கொள்ள முடிந்தது. எழுந்திருந்தால் மானமே போய்விடும் போலிருந்தது. வெளிச் சத்தில் நாளைப் பகலில் அவளால் எப்படி வெளியே தலைகாட்ட முடியும்? அதை எண்ணும்போதெல்லாம் கண்ணீர் பெருகி வடிந்தது.

''ஏண்டி குட்டி அழுறே?'' என்று செருப்பு எடுக்க வந்த அம்மாள் காசு கொடுக்கும் போது அவளைப் பார்த்துக் கேட்டாள்.

சுற்றிலும் யாரும் இல்லை.

''நான் இங்கே இருக்கப் படாதுன்னு சண்டை வலிச்சு, என் துணியை யெல்லாம் கிளிச்சுப்புட்டாம்மா ஒரு பையன்!''

''என்ன கேடுகாலம் அவனுக்கு? வெள் ளிக் கிழமையும் அதுவுமா ஒரு கன்னிப் பெண்ணை அலங்கோலப்படுத்த! இங்கே கேட்பார் யாருமில்லையா?''

குட்டி கண்மடை திறந்தாற்போல் குலுங்கி அழுதாள்.

''டீ குட்டி, இதப் பாரு, என்ன ஜாதிப் பொண்ணு நீ?''

குட்டி அழுகைக்கு நடுவே தலையை நிமிர்த்தி ''பொண்ணு ஜாதிதாம்மே!'' என்று பதில் சொன்னுள்.

அவளுக்கு முன்பு முதலியாருக்குச் சொன் னதுதான் சரியான பதில் என்று நினைப்பு. முதலியார் செய்தது போலவே அந்த அம் மாளும் அவளுடைய அறியாமையைக் கண்டு சிரித்துக் கொண்டாள்.

''எங்கே வீடு உனக்கு?''

குட்டி கண்களைத் துடைத்துக் கொண்டு உதட்டைப் பிதுக்கியவாறு கோயில் வாசலைச் சுட்டிக் காட்டினுள்.

''என்னடி கோயிலைக் காட்டறே? ஆயி, அப்பன் யாருமில்லையா உனக்கு?''

''ஊகும். நான்தான்.''

''மாத்துத் துணியும் இல்லியா?''

''ஊகும்; இதுதான்!''

அந்த அம்மாள் அங்கேயே தயங்கி நின்ருள். தனக்கு ஏதோ செய்ய விரும்புகிருள் என்று குட்டிக்குப் பட்டது.

''ஏண்டி பொண்ணே, எங்கூட வந்திட்டு வறியா சித்தே?''

இதைக் கேட்டதும் குட்டியின் துருதுருத்த கண்கள் ஒரு கணம் பளபளத்தன. ஆனால் மறுகணம் மங்கிவிட்டது.

''இதா என்னப் பாரம்மா!'' என்று அவன் இருந்த இடத்திலிருந்து எழுந்து நின்றாள். ''எப்படிம்மா இத்தோட நான் தெருவிலே வாறது?'' என்று வாலி வாலியாகத் தொங்கிய பாவாடையைத் தொட்டுக் காட்டினாள்.

''சரி சரி — நீ வரவேண்டாம். ஒக்காந்துக்கோ'' என்று சொல்லி விட்டுப் போய் விட்டான். அதற்குப் பிறகு கோயிலுக்குப் போனவர்கள் திரும்பி வருவதும் செருப்பை மாட்டிக் கொண்டு சில்லறையைக் கொடுத்து விட்டுப் போவதுமாக ஒரு மணி நேரம் கழிந்தது. அப்புறம் அந்த இடத்தை விட்டு எழுந்து போக வழியில்லாமல் குட்டி அங்கேயே சும்மா உட்கார்ந்திருந்தாள். கை நிறையச் சில்லறை. இருந்தும் அவளுக்கு உற்சாகம் இல்லே. இவ்வளவையும் கொடுத்தாலும் கடையிலிருந்து துணி கிடைக்காது என்று அவளுக்குத் தெரியும். அதுக்கு நோட்டு நோட்டாக வேண்டும். கடையெல்லாம் மூடுகிற நேரம். அதையும் தவிர, இந்த வேஷத்தோடு யார் போவது? கோயிலடிக் கடைகள் இப்போதைக்கு மூட மாட்டார்கள். அதனால் அவள் வழக்கமாகப் படுக்கிற இடைவெளிப் பக்கமும் போவதற்கில்லே. போனால் பூக்கடை சண்முகம் கண்ணில் பட்டுத்தான் ஆக வேண்டும். அவனோடு போகுமா? எல்லாரிடமும் சொல்லி மானத்தை வாங்குவான். அதிலும் முதலியார் கடையில் இல்லேயென்றால் அவனை அடக்குவாரே கிடையாது. போனால் படித் துறைக் கோடிக்குத்தான் போகலாம். எப்படியும் போய்த்தான் தீர வேண்டும்.

ஆள் நடமாட்டம் இல்லாத சமயம் பார்த்து எழுந்து ஓடிவிடலாம் என்று காத்திருந்தாள்.

''நலந்தானா? நலந்தானா?ஆ...ஆ... உடலும் உள்ளமும் நலந்தானாஆஆ?'' என்று நாராசமான குரலில் பாடிக் கொண்டு வந்தான் ஒரு சிறுவன். அவனுக்கு உற்சாகம் பிய்த்துக் கொண்டு போயிற்று. அப்படியே. குட்டி அவன் கையில் ஒரு பேப்பர் வைத்திருப்பதைப் பார்த்தாள். பளிச்சென்று ஒரு யோசனை மின்னிற்று.

''தம்பி, தம்பி — இங்கே வாயேன்!''

சிறுவன் முகத்தைச் சுளித்துக் கொண்டே, ''என்னத்துக்கு? சொல்லேன்!'' என்று எட்ட இருந்தபடியே கேட்டான்.

''பாட்டு நல்லாப் பாடறியே. அந்தக் காகிதத்தை எனக்குக் கொடுக்கிறியா?''

அவள் கையில் நிறையச் சில்லறை இருப்பதையும் பார்த்தான்.

''காகிதமா இது? பேப்பர் காசு கொடுத்து வாங்கிட்டுப் போறேன்.''

''போறப்போ வேறே வாங்கிக்கோயேன். என்ன காசு வேணுமோ தர்றேன். இந்தா, வாங்கிக்க!'' என்று கையில் வந்த சில்லறையைக் கொடுத்தாள்.

''இருவத்தஞ்சுதான். முப்பது கொடுத்திருக்கியே!''

''இருந்தா இருக்கட்டும். வெச்சுக்கோ!''

சிறுவன் அவள் சொன்னதை நினைத்துக் கொண்டு இன்னும் சற்று உரக்கப் பாடிக் கொண்டே போனான். ''நலந்தானாஆ!''

எங்கேயாவது அவன் திரும்பி வந்துவிடப் போகிறானே என்று குட்டிக்குப் பயம். பேப்பரை நன்றாகப் பிரித்தபடி வேகமாக எழுந்தாள். உடலைச் சுற்றி இரு கைகளாலும் இடுக்கியபடி இருண்ட பகுதியை நோக்கி நடந்தாள். மதில் ஓரமாகவே போய், குளக்கரைக்கு வந்து விட்டாள்.

குளத்தின் கட்டைச் சுவரைக் கடந்து, படித்துறை தென்னண்டைக் கோடிக்கு வந்த பிறகுதான் அவளுக்குச் சொந்தமான இடத்துக்கு வந்த மாதிரி ஒரு நிம்மதி பிறந்தது. யாருமே வரத் துணியாத இருண்ட பகுதியானாலும் அவளுக்கு அது பழகிய இடம். அதுவரையில் உடலைச் சுற்றியிருந்த பேப்பரை மடித்துப் போட்டுவிட்டு, கையிலிருந்த சில்லறைகளை ஓரமாக ஓரிடத்தில் வைத்தாள். பாதியாகக் கிழிந்த மேல் சட்டையை மார்போடு சுற்றிக் கட்டிக் கொண்டாள். அறுதல் பாவாடையை முன் பக்கம் சேர்த்து மூலக் கச்சமாகக் கொண்டு போய்ப் பின்னால் செருகிக்கொண்டாள். அதன் பின்னர் தண்ணீர் இருந்த பாசிப் படியை நோக்கி மெல்ல இறங்கினாள்.

''ஏ குட்டீ!'' என்று ஒரு குரல் உரத்துக் கூவியழைத்தது.

அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அந்தக் குரல் அறுபத்து மூவர் உற்சவத்தில் தன்னை விட்டுப் பிரிந்த தாயின் குரல் போல—

''யம்மோவ்!'' என்று தன்னை யறியாமல் அவள் அலறினாள்.

பசு கன்றின் குரலைக் கேட்டதோ என்னவோ, கன்று படிகளில் தாவி யேறி, குளக்கரை மதிலுக்கு ஓடி வந்து விட்டது.

''ஏ குட்டீ!''

''யம்....'' என்று பதில் குரல் எழுப்பப் போனவளுக்குப் பிற்பகுதி ''மா'' நெஞ்சுக்குள்ளேயே புதைந்து போயிற்று.

அது அவளைப் பிரிந்த தாயின் குரலல்ல. தாயும் அல்ல. தெரு விளக்கின் வெளிச்சத்தில் கூப்பிட்டவள் முகம் வேறு யாரோ ஒருத்தியுடையது. ஏமாற்றத்தோடு அவள் பழையபடி படிக்கட்டுகளில் இறங்கி வந்தாள். நெஞ்சு கனத்தால் உடலே கனப்பது போல் கால்கள் இரண்டும் தள்ளாடின. மறுபடியும் பாசிப் படிகளில் காலே ஊன்றப் போனபோது, பின்னால் கட்டியிருந்த கச்சத்தைச் சேர்த்து யாரோ பற்றித் தடுப்பது போல் இருந்தது.

குட்டிக்குச் சொரக்கென்றது. பயத்தால் வாய் குழறியது.

''நில்லு ! தண்ணியிலே ஏன் இறங்கிறே?!''

''கு...கு... குளிக்க !''

''குளிக்க வாணாம். மோவத்தை மட்டும் கழுவிக்கினுவா !''

குட்டி அவன் பிடியைத் தள்ளி விட்டாள்.

''சை — நான் யாரோன்னு என்னமா பயந்திட்டேன் !''

'' பயப்படாதே. நான்தான் இருக்கிறேனே. இன்னா பயம் ?''

மாணிக்கம் வந்தது அவளுக்குத் தெம்பாகவே இருந்தது. முகம், முழங்கால் முட்டி



### சொல்லாத வார்த்தைகள்!

''எனக்குப் பிறகு பிரதமராகப் போகும் சந்தம் வேண்டுமானால் ஜெயப்பிரகாஷ் நாராயணனோடு பேசுக வார்த்தை நடத்தட்டும். என் தந்தை எப்படி ஷேக் அப்துல்லாவை நடத்தினாரோ அதைப் போலத் தான் நான் ஜெயப்பிரகாஷை நடத்துவேன். வேறு வழியில்லை''

- இந்திரா காந்தி

நன்றி: (எவ்வரி மேன்ஸ்) - பாபு

நேயர்களே இது போன்ற ''சொல்லாத வார்த்தைகள்'' எழுதியனுப்புமாறு கோருகிறோம். பிரசுரமாகும் சொல்லாத வார்த்தைகளுக்குப் பரிசு உண்டு.

முடிவு தேதி: ஏப்ரல் 26. திருப்பி அனுப்புவது, கடிதப் போக்குவரத்து முதலியன....மூச்!

---

எல்லாவற்றையும் தண்ணீரில் கழுவிக் கொண்டாள்.

''உயுந்திடுவேன்னு பார்த்துக்கினியா ?''

''ஆங்.. அதெல்லாம் தெரியாதா? வயுக்கி வியுக்கி உட்டுதானே இன்னா செய்யிறது ?''

இருவரும் கரையேறி மேல் படிக்கு வந்தார்கள். மதில் ஓரமாக வைத்திருந்த பை ஒன்றைக் கொண்டு வந்தான் மாணிக்கம்.

''தா–புடி!''

''இன்னாது இது ?''

''ஒனக்குத்தான். சட்டைடிராயரு. வேறெ துணி எதுவுமில்லே. இதான் எட்துக்கினு வந்தேன். என் டிராயரு, சட்டை !''

குட்டிக்குச் சிரிப்பு வந்தது.

''இத்தே நான் போட்டுக்கறதா ?''

''ஏன், பையனுட்டம் இருப்பே. இருந்தா இன்னா ? இதுக்கா சிரிக்கிறே ?''

குட்டியின் சிரிப்பு நின்றது. ஒன்றுமில்லாததற்கு ஏதோ ஒன்று. மானத்தைக் காக்க ஒரு துணி. அவள் மனம் நெகிழ்ந்து விட்டது.

'' சர்தான், குடுத்திட்டுப் போ அப்பாலே. மாட்டிக்கினு வரேன்.''

மாணிக்கம் குளத்தின் மதில் சுவரைக் கடந்து போய், வீதி ஓரத்திலே நின்றான். குட்டி அவனுடைய அரை டிராயரையும் சட்டையையும் மாட்டிக் கொண்டு வெளிச்சத்தில் வந்ததை அவன் கவனிக்கவில்லே.

''ஏன், பெறவு நின்னுக்கினேக்கிறே ?''

''அட பாத்துக்கினியா, யாரோங்காட்டியும்னுக்கிறேன். அடையாளம் கண்டுக்கலே. இப்ப இதே போலத்தான் பல பேரு போட்டுக்கிறாங்களே !''

'' சரி, இந்தா புடி ! இதெல்லாம் ஒன் துட்டுத்தான். நான் எம் பங்குக்கு முப்பதுகாசு எட்துக்கினேன். இந்தத் துட்டுலே எதுனா கடலே, முறுக்கு வாங்கிக்கினு வா, போவலாம்.''

இருவரும் கடலேயைக் கொரித்தபடி கோயில் வாசலுக்கு வந்தபோது நடுத்தர வயதைக் கடந்த தம்பதியாக இருவர் அங்கே நிற்பதைக் கண்டு, சட்டென்று தயங்கி நின்றாள் குட்டி. ஒருத்தி முன்பு வந்த அம்மாள். பக்கத்தில் ஐயா.

அந்த அம்மாள் குட்டியிடமே வந்து, ''அடே பையா, இங்கே ஒரு குட்டி செருப்பை வெச்சின்டு ஒக்காந்திருக்குமே, அது இப்ப எங்கே இருக்கும்னு தெரியுமா ?'' என்று கேட்டாள்.

'' யாரு யாரு ?'' என்று கேட்டான் மாணிக்கம்.

''அந்தக் குட்டியைப் பார்க்கணும். எப்பவும் இங்கேதான் இருப்பேன்னு சொல்லித்து அது. ஆனா இங்கே காணலியே !''

'' இதாத்தான் கீறாளே, தெரியலியா ?'' என்றான் மாணிக்கம்.

குட்டிக்கு இதைப் பார்த்ததும் சிரிப்பு வந்தது. பச்சரிசிப் பற்களைக் காட்டி அழகாகச் சிரித்தாள்.

''ஏண்டி குட்டீ, நீதானா அது ? யாரோ பையன் போலன்னா நெனைச்சேன். இதென்னடி டிரஸ் ? இது எங்கே கெடச்சது உனக்கு அதுக்குள்ளே ?''

''இதோடது !'' என்று மாணிக்கத்தைக் காட்டினாள் குட்டி.

'' வாண்டாம்; அவங்கிட்டேயே கழட்டிக் கொடுத்துடு: நாங்க ஒனக்கு வேறே டிரஸ் கொண்டு வந்திருக்கோம்! இதோ பார்த்தியா !'' என்று கையில் கொண்டு வந்திருந்த அட்டைப் பெட்டியைக் காட்டினாள் அந்த அம்மாள்.

குட்டி அந்தப் பெட்டியைப் பார்த்துவிட்டு விழித்தாள்.

''இந்தா, இதைக் கோயிலுக்கு உள் பக்கமாப் போய்ப் போட்டுண்டு வா, போ. எல்லாம் வச்சக்கிறபடி வச்சண்டா நீ இன்னும் துருதுருன்னு அடையாளமே தெரியாமத் தான் மாறிப் போயிடுவே. என்னடீ முழிக்கிறே ? எங்க வீட்டுப் பெண் போட்டுண்டிருந்ததுடீ இது; புதிசாவே இருக்கு. அவ இப்ப அமெரிக்காவிலே இருக்கா. இனிமே நீதான் அது வரையிலே எங்களுக்குப் பொண்ணு. இன்னிக்கு வெள்ளிக்கிழமை. கன்னியாப் பொண்ணாவும் இருக்கே. நீ யாரா இருந்தா என்ன? எங்களோடேயே வந்து இருந்துடு. நாங்க பார்த்துக்கறோம். இந்த மாதிரி வயசிலே நீ இனிமே தெருவிலே எல்லாம் இருக்கப்படாது. பெண்களுக்கு அதுவே கேவலம்! புரியறதா நான் சொல்றது ?'' என்றாள் அந்த அம்மாள்.

குட்டிக்கு மூச்சு முட்டிற்று. அவளால் தன் காதுகளையே நம்ப முடியவில்லே.

''இன்னா யோசனே ? அதான் சொல்லிட்டாங்களே. பொட்டியை வாங்கிக்கினு போயேன் !'' என்றான் மாணிக்கம்.

குட்டி அந்த அம்மாள் கொடுத்த பெட்டியை வாங்கிக் கொண்டு கோயிலுக்குப் பின்னால் போனு ... திரும்பி வந்தபோது பழைய குட்டியா... இல்லே; புதுப் பெண்ணாக மாறியிருந்தாள்.

''அளவு எடுத்துத் தைச்சாப்பலென்னா இருக்கு. இதைப் போட்டுண்டா இவளும் ஒரு நாள் அந்தப் பொண்ணாட்டம் அமெரிக்காவுக்குப் போவாளோ ?'' என்றாள் அந்த அம்மாள்.

குட்டி எந்த அமெரிக்காவைக் கண்டாள் ? ஆனால் அந்த அம்மாள் சொல்லி முடித்ததும் கோயில் மணி, ''டாண், டாண்'' என்று அடித்தது.



# ஒவ்வொரு நாளும் புத்தம் புதுமை...
# ரெக்ஸ் ஜெல்லியின்
# பழச்சுவை இனிமை!

**தயாரிப்பது எளிது,**
**தேவையில்லை பாலும் சர்க்கரையும்.**

1 பைண்ட் நீரைக் கொதிக்கவிடுங்கள். அதில் ஒரு பேக்கெட் ரெக்ஸ் ஜெல்லி படிகங்களைப் போட்டுக் கிளறுங்கள். பாலும் சர்க்கரையும் தேவையில்லை. குளிரவிடுங்கள். பின்னர் அதை ரெஃப்ரிஜரேட்டரிலோ அல்லது பனிக்கட்டிமீதோ வைத்துப் படியவிடுங்கள். நன்றாக படிந்ததும், எடுத்துப் பரிமாறுங்கள். அப்படியே அல்லது பழம், கஸ்டர்டு, கேக், ரபடி, பாயசம் அல்லது நீங்கள் விரும்பும் எதனுடனும்!

அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப்படுத்தப்பட்டதால், ஜெல்லி படிகங்களிலேயே மிகச் சிறந்தவை ரெக்ஸ் ஜெல்லி படிகங்கள். ஒரு பேக்கெட் வீட்டில் இருக்கட்டும்....... எப்போதுமே! வாரத்தின் ஒவ்வொரு நாளும் இனிமையான புட்டிங்குகளும் பழத்தின்பண்டங்களும் தயாரியுங்கள்







**ஜெல்லி படிகங்கள்**



**கார்ன் பிராடக்ட்ஸ் கோ.(இந்தியா) பிரை லிட்.** பம்பாய்



OBM-1893-TM



# இரகசியம்! அதிசயம்!

### திங்கள் தரும் தித்திப்பு



**செர்ரி.**
பிள்ளைகளுக்குப்
பிடித்தமானது.
சின்னஞ் சிறு
கிண்ணங்களில்
சிங்காரச் செர்ரி
ஒவ்வொருவருக்-
கும் ஒவ்வொன்று!

### செவ்வாய் தரும் சிறப்பு:

**அன்னாசி.**
ருசிக்க ருசிக்க
ரசிக்கலாம்:
உற்றாருக்கும்
உறவினருக்கும்
உகந்தது.
உருசியின்
ஊற்று!



### புதன் தரும் புதுமை



**ராஸ்பெர்ரி.**
ரசமான
ரத்தச் சிவப்பு.
என்றும்
எப்போதும்
உண்ணச
சிறப்பு!

### வியாழன் தரும் விருந்து:

**ஸ்ட்ராபெர்ரி.**
பாட்டிமார்
ரசிப்பது:
பாப்பாவும்
பெரியவரும்
கூடப் புசிப்பது!



### வெள்ளி தரும் அள்ளி:



**ஆரஞ்சு.**
அள்ளிப்
பருகும் சுவை
ஆரஞ்சுச்
சுளையுடன்
அருமையான
சுவை!

### சனி தரும் கனி:

**லெமன்.**
இனிப்பும்
புளிப்பும்
தருவதில் எமன்
விருந்தினில்
மகிழ்ச்சியை
அளித்திடும்
மன்னன்



### ஞாயிறு தரும் ஞாபகம்:



பழச்சுவை மிகுந்த ரெக்ஸ் ஜெல்லியை நினைக்க நினைக்க நாவில் நீர் ஊறும்! க்ரீம் மற்றும் பாதாம் பருப்புடன் கலக்தால் சுவையோ சுவை! சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி போல.



# தீவுகள்

## இந்திரா பார்த்தசாரதி



### 2

''மோகினியைக் கொன்றுவிடுவேன்!'' என்று ஸ்வர்ணா சொல்லிவிட்டுச் சிறிது நேரம் அப்படியே ஆடாமல் அசையாமல் கட்டிலின் கால்களை உற்றுப் பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருந்தாள். விஜயாவுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. எழுந்து போய்க் கட்டிலில் உட்கார்ந்து, அரை குறையாகத் தூங்கிக் கொண்டிருந்த ரூபியை இலேசாகத் தட்டிக் கொடுக்கத் தொடங்கினாள்.

''ரூபியை உனக்குப் பிடித்திருக்கிறதா?'' என்று கேட்டாள் ஸ்வர்ணா, சிறிது நேரம் கழித்து.

''மிகவும்.''

''அப்படியானால் இந்த வீட்டை விட்டுப் போய் விடாதே... ரூபிக்கு ஒரு தாய் அவசியம் வேண்டும்.''

''ஏன் நீங்கள் இவளுடைய தாய் இல்லையா?''

''இல்லை....நான் ஒரு பந்தத்திலும் மாட்டிக்கொள்ள விரும்பவில்லை. இதனால்தான் ரூபியைப் பார்க்கவே நான் பயப்படுகிறேன். பாசம் ஏற்பட்டுவிடுமோ என்ற பயம்.''

இதைச் சொல்லிக் கொண்டே அவள் அறையை விட்டு வெளியேறினாள்.



ஸ்வர்ணாவும் மோகினியும் பேசிக் கொள்வதே கிடையாது. ஸ்வர்ணாவைப் பற்றி மற்றவர்களிடம் விசாரிப்பாளேயன்றி நேரே அவளை ஒன்றும் கேட்பதில்லை. இப்பொழுது விஜயாவுக்கு ஓரளவு புரியத் தொடங்கியது. அவள் கட்டாயமாகச் செய்து வைத்த திருமணத்தின் காரணமாக ஏற்பட்ட குற்ற உணர்ச்சியினால்தான் மகளிடம் அதட்டிப் பேசமுடியாத நிலையில் இருக்கிறாள் போலிருக்கிறது. வீட்டில் யாருடனும் ஸ்வர்ணா பேசுவது கிடையாது. சொல்லப் போனால் வீட்டில் எல்லோருமே ஒருவருடன் ஒருவர் அதிகமாகப் பேசுவதில்லை. பேசுவதெல்லாம் மோகினிதான், அதுவும் சண்டை போட.

அப்பொழுது அறைக் கதவை யாரோ தட்டினார்கள்.

''எஸ்...'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தாள் விஜயா.

மான்சிங் உள்ளே வந்தான். ''உங்களை மெம்சா(ஹ)ப் கூப்பிடுகிறார்கள்.''

''இதோ வருகிறேன்.''

விஜயா ஹாலுக்குச் சென்றபோது மோகினி ஏதோ கடிதம் எழுதிக் கொண்டிருந்தாள். ஒரு தலையசைப்புடன் அவளை எதிர்த்தாற்போலிருந்த . நாற்காலியில் உட்காரும்படி சைகை காட்டினாள்.

இவள் கடிதம் எழுதி முடிக்கும் வரை காத்திருக்க வேண்டுமோ என்ற சந்தேகம் விஜயாவுக்கு ஏற்பட்டது. ஒருவேளை இந்தக் கடிதத்தை எழுதி முடித்த பிறகு 'இதை இவரிடம் கொடுத்துவிட்டு வா'

என்று வெளியில் அனுப்பப் போகிறாளோ? வெளியே நல்ல குளிர்... எப்படிப் போவது?'

நல்ல வேளை. கடிதத்தை முழுவதும் எழுதி முடிக்கவில்லை. பாதியிலேயே நிறுத்தி விட்டு அதை ஒரு தடவை படித்தாள். பிறகு அதைச் சுக்குநூறாகக் கிழித்துவிட்டுத் துண்டுகளை அவளிடம் கொடுத்து அறை ஓரத்திலிருந்த தொட்டியைச் சுட்டிக் காட்டினாள். 'இதற்காகவா தன்னைக் கூப்பிட்டு அனுப்பியிருக்கிறாள்?' என்ற சந்தேகம் ஏற்பட்டதும், அவளுக்குச் சிரிப்பு வந்தது. மோகினியைப் பற்றிச் சொல்ல முடியாது. அவள் எது வேண்டுமானாலும் செய்வாள். காகிதத் துகள்களைக் குப்பைத் தொட்டியில் போட்டு விட்டு மறுபடியும் வந்து அவள் எதிரே உட்கார்ந்தாள் விஜயா.



''ஸ்வர்ணா இப்பொழுது உன் அறைக்கு வந்திருந்தாளா?''

''ஆமாம்.''

''எங்கே போயிருந்தாளாம்?''

''சொல்லவில்லை.''

''அப்படியானால் என்னதான் பேசிக் கொண்டிருந்தாள்?''

''ரூபியைப் பற்றி...''

''பொய் சொல்லாதே.... அவள் ரூபியைப் பற்றிக் கவலைப்படுவதே கிடையாது. அவள் குடித்திருக்கிறாள். என்னைத் திட்டியிருப்பாள், அப்படித்தானே?''

விஜயா பேசாமலிருந்தாள்.

''என்னை இந்த வீட்டில் திட்டாதவர்கள் யார்?... உண்மையாகச் சொல். நீயும் என்னை உள்ளூற வெறுக்கிறாய்...இல்லையா?''

''நிச்சயமாக இல்லை மேடம்.''

''உன் குடும்பத்தைக் காப்பாற்ற இந்தப் பணம் தேவையில்லை என்றால் எப்பொழுதோ போயிருப்பாய், அப்படித்தானே?''

விஜயா பதில் சொல்லவில்லை.

''ஏன் பேசாமல் இருக்கிறாய்? நான் சொல்லுவது சரிதானே?''

''பணம் தேவைப்படாவிட்டால் நான் வேலைக்கே வந்திருக்க மாட்டேன், மேடம். பணம் தேவைப்பட்டு வேலைக்கு வந்த பிறகு எதையும் தேர்ந்தெடுக்கக் கூடிய உரிமை எனக்கு இல்லை.''

''அதுவும் என் அம்மாவைப் போன்ற எஜமானி அம்மாளிடம் வேலை செய்யவேண்டுமென்றால் உன் தேவை எத்தனை பெரியது என்று புரிகிறது.''

இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். அஞ்சலி தலைமயிரை 'ப்ரஷ்' செய்துகொண்டே இதைச் சொன்னாள்.

அவளை உதாசீனம் செய்வதுதான் விவேகம் என்று நினைத்த மோகினி சடக்கென்று தலையைத் திருப்பிக் கொண்டாள்.

''நான் அப்பொழுது 'ஷட் அப்' என்று கத்தினது தப்புத்தான். என் பேரில் உனக்குக் கோபம் இல்லையே?''

''நீங்கள் என்னைவிட எவ்வளவு பெரியவர்கள்?... என் அம்மா சொன்னால் கோபிப்பேனா?''

அஞ்சலி மோகினிக்கு அருகில் வந்து உட்கார்ந்தாள். ''அம்மாவா, பாட்டியா?'' என்று விஷமமாகச் சிரித்துக் கொண்டே கேட்டாள்.

''நீ சிகரெட் குடித்திருக்கிறாய்...'' என்று சீறினாள் மோகினி.

''எஸ் மேடம்!'' என்றாள் அஞ்சலி, விஜயா பேசுவது போல் ஒரு போலிப் பணிவுடன்.

''உனக்கு வெட்கமாக இல்லை?... இந்தச் சின்ன வயதில் இப்பொழுதே ஆரம்பித்து விட்டாயா?''

''இப்பொழுது ஆரம்பிக்கவில்லை. மூன்று வருஷங்களாகக் குடித்து வருகிறேன். சின்னச் சின்ன வயதிலிருந்து...''

''மரியாதையாக எழுந்து போய்விடு.... கோபத்தில் நான் என்ன செய்வேனென்று எனக்கே தெரியாது.''

''எனக்குத் தெரியும்.... களைத்துப்போய் அப்பா வீட்டுக்கு வந்ததும் அவரை உலுக்கி எடுத்து விடுவாய்.... உன் கோபத்தை வேறு யாரிடம் காட்ட முடியும்?''

மோகினி அப்படிச் செய்வாளென்று மோகினி எதிர்பார்க்கவேயில்லை. எழுந்து அஞ்சலியின் கன்னத்தில் பளாரென்று அறைந்து விட்டாள்.

அஞ்சலிக்கும் இது மாபெரும் அதிர்ச்சியாக இருந்திருக்க வேண்டும். சில விநாடிகள் அப்படியே செயலற்று முகத்தில் ஒரு பாவமுமில்லாமல் மோகினியையே சிறிது நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு எழுந்தாள். சோபாவின் பின்புறம் போய் நின்றாள். முகமே வெறுப்பாக மாறி மோகினியை நோக்கினாள்.

''ஐ ஹேட் யு... ஐ விஷ் யு டெட்'' என்று நிதானமாக ஒவ்வொரு சொல்லையும் அழுத்திச் சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டாள்.

திக்பிரமை பிடித்தவள் போல் மோகினி கொஞ்ச நேரம் நின்றாள். மோகினி பயந்து நிற்பது போல் விஜயாவுக்குப் பட்டது. இவள் இப்படிப் பயப்படுவது வாழ்க்கையில் முதல் தடவையாக இருக்க வேண்டும்.

ஸ்வர்ணா சொன்னது விஜயாவுக்கு ஞாபகம் வந்தது. நான் என்ன செய்கிறேன், எங்கே போகிறேன் என்பது பற்றியெல்லாம் அம்மாவால் இனிக் கேட்க முடியாது. கேட்டால் ஐ வில் கில் ஹர்' இதோ அவளுடைய தங்கை சொல்கிறாள்: 'ஐ ஹேட் யு... ஐ விஷ் யு வேர் டெட்!' எல்லாரும் மோகினியை இப்படித் தீவிரமாக வெறுக்க என்ன காரணம்? வீட்டில் தன் குரல்தான் ஓங்கியிருக்க வேண்டும் என்பது மட்டும் காரணமாக இருக்க முடியாது. தான் வந்து ஆறு மாதம் ஆகிறது. இவர்களுடைய குடும்பச் சரித்திரத்தைப் பற்றித் தனக்கு என்ன தெரியும்?

''பணக்காரர்களைக் கண்டால் எல்லோரும் பொறாமைப்படுகிறார்கள். என்னைக் கண்டால் உனக்குப் பொறாமையாகவா இருக்கிறது?'' என்று கேட்டாள் மோகினி.

விஜயா பதில் சொல்லவில்லை. வாசலை நோக்கினாள். அங்கே பாபியின் கணவன் சதீஷை இரண்டு பேர் கைத்தாங்கலாக அழைத்து வந்தார்கள்.

''என்ன ஆகிவிட்டது?'' என்று பதற்றத்துடன் கேட்டாள் மோகினி.

''கிளப்பில் நிறையக் குடித்து விட்டார்'' என்றான் ஒருவன்.

* * *

**க**பூர் கைக் கடிகாரத்தைப் பார்த்தார். மணி எட்டு. ஒரு பெரிய வியாபார நிறுவனத்துக்குத் தொழில் விஸ்தரிப்புத் திட்டம் ஒன்றை அவர் கொடுத்திருந்ததன் பேரில், அந்தக் கம்பெனி டைரக்டர்களின் முக்கிய கூட்டம் நடந்து அப்பொழுதுதான் முடிந்திருந்தது. அவர் கூட்டம் முடிய இன்னும் நேரமாகும் என்று எதிர்பார்த்தார். ஆனால் சீக்கிரம் முடிந்து விட்டது. இப்பொழுது வீட்டுக்குப் போயாக வேண்டும்.

''வீட்டுக்குத்தானே ?'' என்று கபூரைக் கேட்டார், கம்பெனி டைரக்டர்களில் ஒருவரான அத்வானி.

''அதான் யோசிக்கிறேன்'' என்றார் கபூர்.

'' என் கார் சர்வீசுக்குப் போயிருக்கிறது. என்னைக் கிளப்பில் விட முடியுமா ?''



## செஸ் சாம்பியன்!

புதிய செஸ் உலக சாம்பியன் கார்போவ் ரஷ்யாவில் 1951ல் பிறந்தவர். ஏழாவது வயதிலேயே செஸ் ஆட்டம் கற்றுக் கொண்டவர். பதினைந்தாவது வயதில் ரஷ்ய 'விளையாட்டுக் கலை மாஸ்டர்' என்ற விருதைப் பெற்றார். மூன்றாண்டுகளுக்குப் பிறகு உலக ஜூனியர் செஸ் சாம்பியன் பதவியை அடைந்தார். இதற்கு மேலும் படிப்படியாக உயர்ந்து வந்த கார்போவ், அமெரிக்க கிராண்ட் மாஸ்டர் பிஷ்ஷர் உலகப் போட்டியில் கலந்து கொள்ள முன்வராதிருக்கவே, அண்மையில் உலக சாம்பியன் பட்டத்தைப் பெற்று விட்டார்! இருபத்திநாலு வயதிலேயே இச் சாதனை புரிந்தது அதிசயம்தான்!

ஆதாரம்: ஹிந்துஸ்தான் டைம்ஸ்—குண்டுமணி

''ஓ. யெஸ்!''

கபூர் எழுந்திருந்தார்.

''உங்களைப் பார்த்தால் யாரும் முப்பத்தைந்து வயதுக்கு மேல் மதிக்கமாட்டார்கள்'' என்றார் அத்வானி. அவர் குரலில் இலேசாகப் பொறாமை உணர்வு நிழலாடுவது போல் கபூருக்குப் பட்டது. அத்வானிக்கு நாற்பது வயதுதான் இருக்கும். ஆனால் அவர் நரையையும், தொந்தியையும் பார்க்கும்போது, இருபது வயது கூட்டிச் சொல்லலாம்.

வெளியே நல்ல குளிர். வெண் புகையைக் கொண்டு மூடினாற்போல், பனி மூட்டம். கபூர் 'ஓவர் கோட்'டின் பித்தான்கள் எல்லாவற்றையும் போட்டுக் கொண்டார்.

''காரின் ஆத்மா குளிர்ந்திருந்தால், இதைத் தள்ள ஆட்களைத் தேட வேண்டும்'' என்றார் கபூர்.

''காருக்கு ஆத்மா உண்டா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார் அத்வானி.

''இந்தக் காலத்தில் ஜடப் பொருள்களுக்குத்தான் ஆத்மா இருப்பதாக நினைக்க வேண்டும். மனிதனுக்குக் கிடையாது'' என்றார் கபூர்.

நல்ல வேளை, இஞ்ஜின் உடனே 'ஸ்டார்ட்' ஆகிவிட்டது.

அத்வானி ஒரு சுருட்டைப் பற்ற வைத்துக் கொண்டே கேட்டார்: ''நீங்கள் ஏன் இப்படிச் சொல்கிறீர்கள்?''

''எப்படி?''

''மனிதனுக்கு ஆத்மா கிடையாது என்று.......''

''இக்காலத்தியப் பொருளாதாரத் தற்காப்புப் போராட்டச் சூழ்நிலையில், ஆத்மா செத்தவர்கள்தான் சமூக ஏணியில் முன்னேறிக் கொண்டிருக்கிறார்கள். என்னையே எடுத்துக் கொள்ளுங்கள்.....ஏழு லட்சம் ரூபாய் செலவில் கட்டி முடித்த என் பங்களாவின் அஸ்திவாரத்தில் எங்கோ ஒரு மூலையில் என் ஆத்மாவும் புதைக்கப்பட்டிருக்கிறது என்ற பிரமை எனக்கு அடிக்கடி ஏற்படுவது உண்டு.......'' என்று சொல்லிவிட்டு விரக்தியாகச் சிரித்தார் கபூர்.

''நீங்கள் வாழ்க்கையில் தோல்வி கண்டவர் போல் சிற்சில சமயங்களில் பேசுவது எனக்கு வேடிக்கையாக இருக்கிறது. எங்களைப் போல் முதலீடு செய்துவிட்டுப் பலன் ஏற்படுமா, ஏற்படாதா என்று விரல்களைப் பிசைந்து கொண்டு அவதிப்படும் 'டென்ஷன்' உங்களுக்குக் கிடையாது. உங்கள் மூளைதான் உங்கள் மூலதனம்..... அப்படி இருக்கும் போது.....'' என்று அத்வானி கூறுவதற்குள், கபூர் இடைமறித்தார்: ''நான் சொல்லுகிற யோசனைகளுக்கேற்ப நீங்கள் முதலீடு செய்யும்போது, நீங்கள் பலனைக் காணவிட்டால், அது என் தொழிலுக்கு ஆபத்து என்ற 'டென்ஷன்' எனக்குக் கிடையாதா?''

''யாருக்கும் புரியாத பொருளாதார—புள்ளியியல் சங்கேத பாஷையில் ஏதோ விளக்கம் சொல்லித் தப்பித்துக் கொள்ளும் சாமர்த்தியமும் உங்களுக்கு இருக்கிறதே! இந்தச் சாமர்த்தியம் இருக்கும் வரை, உங்களுக்கு 'டென்ஷன்' எதற்காக ஏற்பட வேண்டும்?''

கபூர் சிரித்தார். ''மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துகிறோம் என்று சொல்லிக் கொண்டு ஒரு சோஷலிஸப் பொற்காலத்தை அடிவானத்துக்கு அப்பால் காட்டிக் கொண்டிருக்கும் நம் சர்க்காரை ஜனங்கள் நம்புவது போல்தான், என் மீது நீங்கள் வைத்திருக்கும் நம்பிக்கை..... அப்படித்தானே?'' என்று கேட்டார் சிரிப்பைத் தொடர்ந்து.

''அவ்வளவு மோசமில்லை.''

இருவரும் சிரித்தார்கள்.

கிளப் வந்துவிட்டது.

''உள்ளே வாருங்களேன்..... ஹாவ் ஒன் ஃபார் தி ரோட்!'' என்று கபூரை அழைத்தார் அத்வானி.

கபூர் சில விநாடிகள் தயங்கினார். பிறகு, ''சரி..... வருகிறேன்.... ஜஸ்ட் ஒன்....அது போதும் எனக்கு.''

கபூர் அந்தக் கிளப்பின் அங்கத்தினராக இருந்தாலும், அநேகமாக அங்கு போவதே கிடையாது. சமூக அந்தஸ்துக்காகக் கொடுக்க வேண்டிய விலைகளில் இதுவும் ஒன்று என்பது அவர் அபிப்பிராயம்.... அவருக்குப் பிடித்த விஷயங்கள் வேறு எத்தனையோ இருந்தன.... தம்முடைய அந்தரங்க வாழ்க்கையின்

புனிதத் தன்மையை இவ்வளவு ஜாக்கிரதை யாகத் தம்மால் காப்பாற்றிக் கொள்ள முடி கிறது என்ற சந்தோஷமே போதும் அவருக்கு. இது மோகினிக்குக்கூடத் தெரியாது.

உள்ளே போனதும் ரத்தன்லால் வேகமாக அவரிடம் ஓடி வந்தான்..... "இன்றைக்கு அதிசயந்தான்..... நாங்கள் அனைவரும் என்ன பாக்கியம் செய்தோம் ?" என்று சொல்லிக் கொண்டே அவர் கைகளை ஆவேசம் வந்தவன் போல் குலுக்கினான்.

" நான் அழைத்து வந்தேன்" என்றார் அத்வானி.

அதற்குள் இன்னும் இரண்டு மூன்று பேர் அங்கு வந்துவிட்டார்கள்.

"மிஸ்டர் கபூர்.... பீ. ஏ. ஸ்போர்ட், சீட்டாடுவோமா ?"

"ப்ளீஸ்.... என்னை மன்னித்துக் கொள் ளுங்கள்...... நான் சீக்கிரம் போயாக வேண்டும்...."

"மிஸ்டர் கபூர், உங்களிடம் தனியாகப் பேச வேண்டும்" என்று அவரருகில் வந்து சொன்னான் பத்ரா. அவன்தான் கிளப் காரியதரிசி.

கபூருக்கு ஒன்றும் புரியவில்லை....சாதாரண மாகக் காரியதரிசி ஓர் அங்கத்தினரிடம் 'தனி யாக'ப் பேச வேண்டும் என்றால், கிளப்புக்குச் செலுத்த வேண்டிய பாக்கி ஏராளமாக இருக் கிறது என்று அர்த்தம். தாம் இங்கு வருவதே யில்லையே, பாக்கியைப் பற்றிய பிரச்னையே இல்லையே என்று யோசித்தார் கபூர்.

இருவரும் அலுவலக அறைக்குச் சென் றார்கள்.

"ப்ளீஸ்.... உட்காருங்கள்" என்றான் பத்ரா.

" என்ன விஷயம் ?"

"சதீஷ், இன்று இங்கு பெரிய கலாட்டா செய்துவிட்டான்."

" சதீஷா ?"

"ஆமாம்.... உங்கள் மகன்.... நிறையக் குடித்துவிட்டு எல்லோரையும் தாறுமாறாகத் திட்டியதோடு மட்டுமல்லாமல், ஒரு சிப்பந் தியை ஓங்கி அறைந்துவிட்டான். அவனைக் கிளப்பினின்றும் வெளியேற்றுவது பெரும் பாடாகப் போய்விட்டது."

கபூர் ஒன்றும் பேசாமல் விளக்கையே பார்த்துக் கொண்டு நின்றார்.

"சதீஷ் குடிப்பதற்கு முன்னால் எவ்வளவு சாதுவாக இருக்கிறான்.... குடித்த பிறகு... அவனுக்குள் ஓர் அரக்கன் புகுந்து கொண் டிருப்பது போல் தோன்றுகிறது."

"அவன் குடித்துவிட்டுக் குடும்ப விஷயங் களைப் பற்றியும் பேசினானா ?"

பத்ரா ஒரு கண நேரம் தயங்கினான்.

" சும்மா சொல்லுங்கள், பரவாயில்லை" என்றார் கபூர்.

" 'எனக்கு யாரைக் கண்டும் பயமில்லை... கோபம் வந்தால் என் அம்மாவையே கொன்று விடுவேன்' என்று அடிக்கடி சொல்லிக் கொண் டிருந்தார். ஐ திங்க்...."

" நீங்கள் ஒன்றும் நினைக்க வேண்டாம்" என்று சொல்லிவிட்டு அறையை விட்டு வெளியே போனார் கபூர்.

அவர் ஹாலுக்குப் போனபோது, அத்வானி, ரத்தன்லால், கன்னா, மல்ஹோத்ரா ஆகிய எல்லாரும் ஒரு மேஜையைச் சுற்றி உட்கார்ந்திருந்தார்கள். அவருடைய வருகைக்காக அவர்கள் காத்துக் கொண்டிருப்பது போல் தோன்றிற்று.

"ஐ ஆம் ஸாரி..... மிஸ்டர் அத்வானி.... எனக்கு அவசரமாகப் போக வேண்டும்..... வரட்டுமா ?" என்று சொல்லிக் கொண்டே அவருடைய பதிலுக்குக்கூடக் காத்திராமல் கிளப்பைவிட்டு வெளியேறினார் கபூர்.

சதீஷ் இப்படி இருப்பதற்கு யார் காரணம்? அவள்தான்.... உபயோகமில்லாதவனாகச் செய்து விட்டாள். அவன் சிறு வயதில் தன் எதிர்ப்பு உணர்ச்சியைக் காட்டிய விதம், அவர் நினைவுக்கு வந்தது. ஒரு சமயம் வீட்டில் நகரத்து முக்கிய பிரமுகர்களுக்கு அவர் விருந்தளித்தபோது சதீஷ் திடீரென்று அங்கு வந்து.... அவனுக்கு அப்பொழுது பத்து வயது இருக்கலாம். விருந்துக் கூடத்தை 'டாய்லட்' அறையாக நினைத்து... ஒரு மிக மிக முக்கிய விருந்தினருடைய விலை உயர்ந்த 'சூட்' நனைந்து விட்டது. அன்று இரவு மோகினி அவனை ஓர் அறையில் வைத்துப் பூட்டிவிட்டாள்..... இத்தகைய தண்டனை களும் அவன் இப்படி உருவாகியிருப்பதற்குக் காரணமாக இருக்கலாம்.... எத்தனை திட்டு திட்டினாலும் வாயைத் திறக்க மாட்டான்... இப்பொழுதெல்லாம் அவன் வாயைத் திறந் திருப்பது..... மது !

அவனை ஜெர்மனிக்கு அனுப்பிப் படிக்க வைத்தார். பட்டம் பெறாமலேயே திரும்பி வந்துவிட்டான். 'ஏன்' என்று கேட்பதற்குப் 'படிக்க இஷ்டமில்லை' என்றான். எவ்வளவு வற்புறுத்தினாலும் வேறு பதிலே கிடையாது. இரண்டு மூன்று இடங்களில் தம் செல்வாக் கைப் பயன்படுத்தி வேலை பண்ணி வைத்தார். வேலை செய்வதற்கு அவனுக்கு விருப்பம்



**டபுள் ரோல் !**

டென்னிஸ் விம்பிள்டன் சாம்பியன் நியூகோம்ப் சினிமா நடிகராகியிருக் கிறார். அவர் நடிக்கும் படத்தின் பெயர் கேம், செட் அண்ட் மர்டர். (Game Set and Murder).

- உமன் - கே. ஆர்.

பவுடரினால் துலக்கிய
பாத்திரத்தின் மீது பொடிக் கசடு
பின்தங்கியிருக்கிறதா?

# மாசில்லாத பளபளப்பை
# வீசிட வைப்பது
# விம்.




**கசடு இல்லை!**
**பிசுக்கு இல்லை!**
**கீறல் இல்லை!**

இல்லை. திருமணம் செய்து வைத்தார். சுமாரான இடந்தான். வேறு யார் பெண் கொடுப்பார்கள் ? அவனுக்குக் கல்யாணம் செய்து வைத்திருக்கக் கூடாது. அவன் திருமணத்துக்கு ஏற்றவனா என்ற சந்தேகம் அவருக்கு எப்பொழுதுமே உண்டு. மோகினியின் பிடிவாதத்தால் இந்தக் கல்யாணம் நடந்தது. இப்பொழுது மோகினி இந்தக் கல்யாணத்தை ரத்து செய்ய வேண்டும் என்கிறாள். பாபியைப் பற்றிப் பல 'வதந்திகள்'... சாதாரண குடும்பத்தில் பிறந்த பெண்ணுக்கு, வாழ்க்கையில் அவள் அனுபவித்திராத சுகம் வலியக் கிடைத்தபிறகு, அவள் அதை உதறித்தள்ளப் பைத்தியமா ? சதீஷ் இப்படி இருப்பதைப் பற்றி அவள் கவலைப்படுவதாகவே தெரியவில்லை.... சதீஷ் அவளுக்குத் தேவையில்லை போல் தோன்றுகிறது....

'என் வீடு ஏன் இப்படி இருக்க வேண்டும் ? எல்லாவற்றுக்கும் காரணம் மோகினி. அவளை என்னால் அடக்க முடிந்ததா ? மோகினியுடைய அப்பா என்னை மேல்நாடுகளுக்கு அனுப்பிப் படிக்க வைத்தார். கெட்டிக்கார, ஏழைப் பையன் ஒருவனுக்கு உயர்தரக் கல்வி கொடுத்ததின் மூலம் முதலீடு செய்து, தம் மகளுக்கு அவனைத் திருமணம் செய்துகொண்டு விட்டார். என்னைப் பார்க்கும்போதெல்லாம் மோகினிக்கு அவள் அப்பா செய்த முதலீடு நினைவுக்கு வருவதில் ஆச்சரியம் இல்லை. நான் விலைக்கு வாங்கப்பட்ட பொருள்... நான் மோகினியை என்றோ விவாகரத்து செய்திருக்கலாம். அதற்கான பல காரணங்கள் இருக்கின்றன. ஆனால் என்னால் முடியவில்லை. இனிமேலும் முடியாது.... என் குண அமைப்பே எனக்குப் பகை. குழந்தைகள் இப்படி வளர்ந்திருப்பதே மோகினிக்குப் பெரிய தண்டனை. இதனால் நான் பாதிக்கப் படவில்லை.... நான் ஒரு தனி ஆள்.... எனக்குக் கல்யாணம் ஆகிக் குழந்தை குட்டிகள் இருக்கின்றன என்பதை மறந்த ஒரு மானசீக நிலையில் என்னால் இருக்க முடியும். வாழ்க்கை என்னும் கோப்பையில் உள்ள இன்ப மதுவைக் கடைசித் துளி வரை சுவைக்கத் துடிக்கும் இளைஞன் நான்.... நான் ஒரு பொருளாதார மேதையல்ல.... மிகச் சிக்கலான பிரச்னைகளையும் தெளிவாகப் புரிந்து கொண்டு தீர்வு காணும் நிபுணன் அல்ல.... சதையும் இரத்த ஓட்டமும் உள்ள ஓர் ஆதார, பௌதிக மனிதனாக என்னை நான் பாவித்துக் கொள்ளும் போது, நாகரிக நிர்ப்பந்தத்தினால் விளைந்த மேல்பூச்சுக்களை என்னால் மறக்க முடியும்.'

வீடு வந்துவிட்டது என்பதை உணர்ந்தார் கபூர். 'போர்ட்டிகோ'வில் மோகினியின் கார் நின்று கொண்டிருந்தது. வெளியே போகப் போகிறாளா? அல்லது இப்பொழுது தான் வந்திருக்கிறாளா ?

அவர் ஹாலுக்குள் நுழைந்தபோது அங்கு நிசப்தமாக இருந்தது. கிளப்பைவிட்டுப் புறப்படும்போது, சதீஷை வீட்டுக்குச் சென்று விசாரிக்க வேண்டும் என்று நினைத்தார். இப்பொழுது அவருக்கு அது அவ்வளவு முக்கியமாகப்படவில்லை.

மான்சிங் அப்பொழுது அங்கு வந்தான்.

''மெம் சாஹேப் வந்து விட்டார்களா?'' என்று கேட்டார் கபூர்.

''அறையில் இருக்கிறார்கள்..... உங்களை வந்ததும் உடனே வரச் சொன்னார்கள்.....''

பிரளயம் ஏற்படப் போகிறது என்பதை அவர் உள்ளுணர்வு உணர்த்திற்று.

அவர் அவனுக்கு ஒன்றும் பதில் கூறாமல், சோபாவில் உட்கார்ந்து கொண்டார்.

'' தேநீர் கொண்டு வரட்டுமா ?'' என்று கேட்டான் மான்சிங்.

''வேண்டாம். சாப்பிடப் போகிறேன்.''

''மெம் சாஹேப்பும் இன்னும் சாப்பிடவில்லை.''

'' அதற்கு நான் என்ன செய்ய வேண்டும் என்கிறாய் ?''

'' நீங்கள் வந்ததும் சேர்ந்து சாப்பிடப் போவதாகச் சொன்னார்கள்.''

''அப்படியானால் அவளையும் கூப்பிடு....''

மான்சிங் கொஞ்சநேரத் தயக்கத்துக்குப் பிறகு மோகினியின் அறையை நோக்கிச் சென்றான்.

கபூர் 'ஓவர்கோட்'டைக் கழற்றிச் சோபாவில் போட்டார். 'டை'யைத் தளர்த்திக் கொண்டார். 'ஸ்விட்சை'ப் போட்டுவிட்டு 'ஹீட்டரை' எடுத்துத் தம் எதிரில் வைத்துக் கொண்டார்.

'' கொஞ்சம் அறைக்கு வருகிறீர்களா ? உங்களிடம் பேச வேண்டும்'' என்று சொல்லிக் கொண்டே வந்தாள் மோகினி.

''சாப்பிட்ட பிறகு பேசலாமே? எனக்கு இப்பொழுது பசிக்கிறது.''

'' நான் இந்த வீட்டை விட்டுப் போகப் போகிறேன்'' என்றாள் மோகினி.

கபூர் நம்பிக்கையுடன் அவளைத் திரும்பிப் பார்த்தார். 'ஏன்' என்று கேட்பதுபோல் புருவத்தை மட்டும் உயர்த்தினார்.

''நான் என் மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்றால், ஒன்று, நான் இந்த வீட்டை விட்டு வெளியேற வேண்டும், இல்லாவிட்டால் மற்றவர்களை வெளியேற்ற வேண்டும்.''

கபூர் பேசாமல் இருந்தார்.

'' ஏன் பேசாமல் இருக்கிறீர்கள்.....? ஏதாவது முடிவு எடுத்தாக வேண்டும்.''

அவர் அவளை மௌனமாக உற்றுப் பார்த்தார்.

'' நான் வீ ட் டை விட்டுப் போய் விடட்டுமா ?''

'' என்ன சொல்லுகிறாய்? எனக்கு ஒன்றும் புரியவில்லை.''

'' எப்படிப் புரியும்? நீங்கள் ஜடந்தானே? மான்சிங் !.... நீ எதற்காக இங்கு நிற்கிறாய்? உள்ளே போ....''

''அவனை ரொட்டி கொண்டு வரச் சொல்லேன்...... எனக்குப் பசிக்கிறது..... சாப்பிடலாம்'' என்றார் கபூர்.

''நான் சாப்பிடப் போவதில்லை.''

''சரி..... நான் சாப்பிடுகிறேன்.''

'' நீங்கள் சுயநலம் பிடித்தவர் என்று எனக்குத் தெரியாதா ? எனக்கு அவமானம் ஏற்பட்டால் அதைப் பற்றி உங்களுக்கு என்ன கவலை ? என்னை யாரேனும் செருப்பால் அடித்தாலும், அது பற்றி உங்களுக்கு சந்தோஷம் தான்........''

''டோன்ட் பி க் ரூட்.... என்ன நடந்தது, சொல்லேன்.''

(தொடரும்)

# ஆந்தீ

திரையுலகில் ஒரு புயல் : இலக்கிய உலகில் உள்ள ஓர் எழுத்தாளனின் கதையைப் படமாக்க வேண்டும் என்ற எண்ணம் எழுந்ததே ஒரு புயல்தானே? ஹிந்திக் கதாசிரியர் ஸ்ரீ கமலேச்வரின் கதை 'ஆந்தி' (புயல்) என்னும் தலைப்பில் படமாக வந்திருப்பதைத் தான் குறிப்பிடுகிறேன்.

இதன் திரைக்கதை, வசனம், இயக்குனப் பொறுப்பை ஏற்றிருப்பவர் குல்ஜார். அரசியலும் குடும்பமும் கலந்த இந்தக் கதையைக் கலை நுணுக்கத்துடன் இழைத்து இணைத்துப் படமாக்கிய பெருமையைக் குல்ஜார் பெறுகிறார்.

கதாநாயகி ஆர்தி தந்தையின் வழியைப் பின்பற்றி அரசியலில் ஈடுபடுவதனால், காதலித்து மணந்த ஜே. கே.யைப் பிரிந்து வாழும்படியாகிறது. அவனுக்கு இது உடன்பாடு இல்லை ஆதலால்!

நாடாளுமன்றத் தேர்தலில் வேட்பாளராக நிற்கும் ஆர்தி தேர்தல் பிரசாரத்துக்காக ஜே. கே.யின் ஹோட்டலில் வந்து தங்கும்படி ஆகிறது. காதல், கல்யாண நினைவுகளைப் பின்னிப் பிணைத்து இருவரையும் இணைக்கும் முறை பாராட்டுக்குரியது. இருவர் பேச்சுக்கும் இடையே குழந்தை வருகிறது. ஆனால் கடைசிவரை அந்தக் குழந்தை படத்தில் வரவில்லை.



அமெச்சூர் நாடகம் என்றால், நல்லபடி நடிக்கக் குழந்தை கிடைக்கவில்லை, எனவே, விலக்கி விட்டார்கள் என்று கொள்ளலாம். ஆனால் படத்தில் இயக்குநர் குழந்தையை விலக்கித் தம் ஆற்றலை அல்லவா வெளிப்படுத்தியிருக்கிறார்! அதோடு இந்தப் படம் இன்னுமோர் உலகறிந்த ரகசியத்தை,



விண்டு வைக்கிறது; தேர்தல் வாழ்வில் நேர்மைக்கு இடம் இல்லை என்று படம் பிடித்துக் காட்டுகிறது.

எதிர்க்கட்சி வேட்பாளராக ஓம் சிவ்புரி தம் நடிப்புத் திறனைக் காட்டுகிறார். ஆர்தியாக வரும் சுசித்ரா ஸென்னே அரசியல்வாதி நடிப்பில் தம்மை இந்திரா காந்திக்கு மாற்றாக நிலைநாட்டிக் கொள்ளுகிறார். நிமிஷத்துக்கொரு நிறம் காட்டும் முக பாவம் அவருக்குக் கை கொடுக்கிறது.

சஞ்ஜீவ் குமாருக்குக் காதலில் தோல்வி கண்ட கணவனின் பாத்திரம். அதில் அவர் வெற்றி காண்பதற்குக் காரணம் அனுபவமா, நடிப்பா? அல்லது இரண்டுமேயா?

ஓம்பிரகாஷின் நடிப்பில் தேர்தல் ஏஜெண்டின் அத்தனை அகடவிகட சாமர்த்தியங்களும் இருக்கின்றன.

எல்லாமிருந்தும் படத்தில் புயலின் வேகத்தைக் காணோம். ஆம், 'புயல்' அவ்வளவு மெதுவாக வீசுகிறது!

—ரா.வீ.

## அப்பா கணக்கு!

"உனக்கு இப்போ செய்திருக்கிற டான்ஸிலில் ஆபரேஷன் உன்னுடைய ஆறுவது வயதிலேயே செய்திருக்க வேண்டியது என்கிறார் டாக்டர்" என்றான் கணவன்.

"அதுக்காக இப்போ என்ன செய்யணும் என்கிறீங்க?" என்றாள் மனைவி. கணவன் சொன்னான்:

"ஆபரேஷனுக்கான செலவுத் தொகையை உன் அப்பாவிடம் வாங்கிக் கொடு."

-சரஸ்வதி பஞ்சு







கண்ணதாசன்

# கடைசிப்பக்கம்

## முதுமை!

அதோ அந்த ஆலமரத்து நிழலில், அந்தக் கிழவன் சுகமாகத் தூங்கிக் கொண்டிருக்கிறான்.

கடந்து போன காலக் கணக்குகளை ஐந்தொகை போடும் வயது.

கால நெடுஞ்சாலையிலே கடைசி மைல் கல்லிலே அவன் நிற்கிறான்.

பருவ காலம் படுத்திய பாட்டை இப்போதவன் எண்ணிப் பார்க்கிறான்.

அந்நாளில் அழகழகாக அலங்கரிக்கப் பட்ட ரோமங்கள் சிக்குப் பிடித்து விட்டன.

பளபளவென்றிருந்த கன்னங்களிலே காலதேவன் முத்திரைக் கோடுகளைப் போட்டு விட்டான்.

வண்டியில் ஏற்றுவதற்காகச் சரக்கு ஸ்டேஷனுக்கு வந்துவிட்டது.

மௌன தேவதையின் பரிபூரண ஆட்சியில் அவன் அமைதியுற்றிருந்தான்.

அவனது பிரார்த்தனை எல்லாம் இது தான் :

'இறைவா,

சொர்க்கம், நரகம் என்று இரண்டிருப்பது உண்மையானால் என்னை நரகத்துக்குக் கொண்டு போ !

இங்கே நான் வாழ்ந்த வாழ்க்கைக்கு அதுதான் நியாயம்.

ஆசை, காதல், அன்பு, பாசம் என்ற சொற் சிலம்பங்களில் எதிலே நான் அதிகம் ஆடினேன் என்பது உனக்குத் தெரிந்ததே !

ரத்தம் சூடாக இருந்தபோது, சித்தம் கல்லாக இருந்தது.

நரம்புகள் முறுக்கேறி இருந்தபோது, விரும்பியவை கோடானு கோடி.

இப்படியொரு முதுமை எனக்கும் உண்டு என்று, நான் எண்ணிப் பார்த்த தில்லை.

ஆன்மா தனது பலவிதப் பயணங்களில் எந்த ஸ்டேஷனில் அதிகம் நின்றதோ, எனக்குத் தெரியாது.

ஏதோ சில பாவங்களை நானும் செய்திருக்கிறேன்.

கொதிக்கின்ற வெந்நீர் மூடியைத் தள்ளுவது போல், துடிக்கின்ற ரத்தம் அச்சத்தை விலக்கியிருக்கிறது.

செத்துப் போன ஜூலியஸ் சீஸரின் உடைவாளும் செயலற்றுப் போனது போல், முடிந்துவிட்ட பருவமும் செயலற்றுப் போனதே !

ஆரோக்கியத்தை இனி நான் எதிர் பார்க்க முடியாது.

உனது அருள் வேண்டியே இந்தத் தவம்.

விரும்பினாலும், விரும்பா விட்டாலும் முதுமைக் காலம் தவக் கோலமே!

இறைவா,

மறுபடியும் நான் பிறப்பதானால், என்னை ஓர் ஆலமரமாகப் பிறப்பித்துவிடு.

காரணம், சிலருக்காவது நிழல் தந்த வரலாறு அதற்கு இருக்கிறது.'

— கிழவனின் வேதாந்த ராகம் இங்கே முடிகிறது.

வாழ்வின் இறுதி நாட்களில் பிரார்த்தனையே பலம்.

லோகாயத வாதம் அப்போது சாரமற்றுப் போகிறது; தெய்வ தத்துவமே கண் முன்னால் தோன்றுகிறது.

பரம நாத்திகனும் படுக்கையில் படுத்தபின் இறைவனை நினைக்கிறான்.

அவனது பிரார்த்தனை பலிக்கிறதோ இல்லையோ, ஆத்மா சாந்தியடைந்து விடுகிறது.

அதோ அந்த மரத்தடியில் கிழவன் தூங்கிக் கொண்டிருக்கிறான்.

நீங்கள், ஏன் அவனை எழுப்ப முயற்சி செய்கிறீர்கள் ?

அவன் நிரந்தரமாகத் தூங்கி வெகு நேரமாகிவிட்டது.

புகைப்படம் : உத்தரா

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

REGISTERED No. M. 4302
Registered as a Newspaper in Ceylon
இலங்கையில் விலை 40 சதம் (தபால் செலவு தனி)



வெள்ளை பூசிய சுவர்கள். தீட்டிய
காவிக் கோடுகள். செம்பழுப்பு ஓட்டுக் கூரை.
சிமிட்டித் திண்ணைகள். தளிர்ப்பச்சைக்
கோரைப்பாய், நீலக் கோல வரிகள். பூசை மாடம்.
புனிதக் கடவுளர். வண்ண மாலை. பொன்னிறச்
சாணம் மெழுகிய அடுப்பு, செந்தழல் நெருப்பு.
பொங்கும் உலையில் சாதத்தின் வெண்மை
நுரைகள். தொங்கும் உரியில் கருமண்
கலங்களின் அடுக்கு. செப்புக் குடம். மஞ்சள்
மினுங்கும் வெண்கலப் பாத்திரங்கள்.
கருங்கல் உரல். அரக்கு வண்ணத்து மரஉலக்கை.
கொல்லையில் பசுமை படர் வேம்பு.
தொங்கும் மஞ்சள் கனிகள்.

வண்ணமோ வண்ணம்!






# நெரோலாக்

## வண்ணம்—நம் வாழ்வோடு ஒன்றிய அங்கம்

U-GNT-25